உங்கள்
குடும்பத்தின்
திட்டமிட்ட பரிபூரண உணவு
இப்போது
ஃபேமிலி பேக்கிலே

# சாக்கலேட் சுவை காம்ப்ளான்
# இப்போது 1 கிலோ பேக்கிலே!

இரண்டு 500 கிராம் பேக்குக்குப் பதிலாக வாங்குங்கள் புதிய 1 கிலோ காம்ப்ளான் பேக், 4 ரூபாய் மிச்சமாக்கிடுங்கள்.

காம்ப்ளான் ஒன்றுதான் உங்கள் குடும்பத்தின் ஒவவொருவருககும அன்றாடம் தேவைப்படும் 23 மூலாதார ஊட்டச் சத்துக்களைக் கொண்டுள்ளது— கார்போஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, வைட்டமின்கள், தாதுக்கள் மற்றும் மிகச் சிறந்த புரதமான பால்புரதம் (20%)

உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் அளியுங்கள் இருவேளை காம்ப்ளான்.

ரூ. 4
மிச்சமாக்குங்கள்






**காம்ப்ளான்** – திட்டமிட்ட பரிபூரண உணவு

ULKA-GL-K-85 TAM

# ராஜீவுக்குப் பிறகு யார்?



**லண்டன் பத்திரிகையான "கார்டியன்" அலசுகிறது!**

அக்டோபர் 31, 1985—இந்திரா காந்தியின் நினைவு நாள். தலைநகரத்தில் பிரதமரின் பாதுகாப்புக்கென 35,000 போலீஸாரைப் பிரத்யேகமாக வரவழைத்திருந்தார்கள்! ராஜீவின் சமீபத்திய லண்டன், நியூயார்க் விஜயங்களின்போது, அவர் அவ்விடங்களைச் சென்று அடைவதற்குச் சில மணி நேரங்களே இருந்த சமயத்தில் அவரைக் கொல்லப் போடப்பட்டிருந்த பயங்கர சதித் திட்டங்கள் கண்டுபிடிக்கப்பட்டு முறியடிக்கப்பட்டன. சீக்கியத் தீவிரவாதிகள் சிலர் கைதாயினர்.

ராஜீவுக்கு ஏதொன்றும் நேரக்கூடாது என்பதே நம் பிரார்த்தனை. ஆயினும் ராஜீவின் உயிருக்கு எந்த நேரமும் ஆபத்து நேரக் கூடிய சூழல் நிலவுவது நிஜமானது. எனவே அவருக்கு ஏதாவது நேர்ந்தால் அவருக்குப் பிறகு யார் என்ற கேள்வியும் அனேகர் மனங்களில் தோன்றிக் கொண்டுதான் இருக்கிறது. ஸோனியா காந்தி அயல் நாட்டவர். 'ராஜீவின் குழந்தைகள் இருவருமே இன்னும் பதினாறு வயதைக் கூட எட்டவில்லை. நேரு வம்சத்தைச் சேர்ந்த மற்றொருவர் பெயரே அரசியல் வட்டாரங்களில் அடிபடுகிறது. அந்த நபர்: அருண் குமார் நேரு. இந்த 44 வயது மனிதரின் 104 கிலோ எடையின் ஒவ்வொரு துளியிலும் தன்னம்பிக்கையும், வாழ்க்கையில் உயர்கின்ற ஆர்வமும் நிறைந்துள்ளது.

யார் இந்த அருண் நேரு? இந்திரா காந்தியின் தாத்தா மோதிலால் நேருவுக்கு நந்தலால் நேரு என்றொரு சகோதரர். நந்தலால் நேருவின் கொள்ளுப் பேரரே அருண் நேரு. அருண் நேருவின் மனைவியும் இந்திரா காந்திக்குத் தூரத்து உறவினர்.

ராஜீவ் பதவிக்கு வந்ததுமே அருண் நேருவைத் தமக்கு உதவத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். அடிப்படை சுபாவங்களில் இருவரும் ரொம்ப வித்தியாசமானவர்கள் என்றாலும் நீண்ட நாளைய நெருங்கிய நண்பர்கள்.

ராஜீவை ஒருகணம் மறந்துவிட்டுப் பார்த்தால், அருண் நேருவைப் போல் அரசியல் வானில் அவ்வளவு வேகமாக உயர்ந்தவர் வேறு ஒருவரும் கிடையாது! 1979 இல் அருண் நேருவின் பெயரைக் கூட யாரும் கேள்விப்பட்டிருக்கவில்லை. இப்போதோ ராஜீவுக்கு அடுத்தபடி இவர்தான் என்று எண்ணுமளவில் முக்கியத்துவம் பெற்று விட்டிருக்கிறார். சட்டம் ஒழுங்கு, உள்நாட்டுப் பாதுகாப்பு, புனர் வாழ்வளித்தல் ஆகியன இவர் கையில். பிரதமரின் நேரடி கவனத்தின் கீழ் செயல்பட்டு வந்த எல்லா துப்பறியும் துறைகளும் இன்று இவரது முழுப் பொறுப்பில் இருக்கின்றன. உள்நாட்டுப் பாதுகாப்பு என்னும்போது போலீஸ் மட்டுமின்றி, ராணுவத்துக்கு அடுத்தபடியாக உள்ள என்.ஸி.ஸி. ஹோம்கார்ட், ஸ்பெஷல்ரிஸர்வ் போலீஸ் போன்ற பலவித அமைப்புக்களும் இவர் கையில்தான் உள்ளன. கிட்டத்தட்ட 2,50,000 பேர் அருண் நேரு இடும் கட்டளையை நிறைவேற்றக் காத்திருக்கின்றனர்.

அரசியலில் நுழைவதற்கு முன்னால் 1979 வரை ஒரு பிரபல பெயிண்ட் கம்பெனியின் டைரக்டராக இருந்தார் அருண் நேரு. 1980 இல் தம் இரண்டு தொகுதிகளுள் ஒன்றான ராய் பரேலியை அருண் நேருவிற்கு ஒதுக்கினார் இந்திரா. அத்தொகுதி மக்கள் இந்திரா இல்லாவிட்டால் நேரு குடும்பத்தைச் சேர்ந்த இன்னொருவரே தங்களுக்கு வேண்டும் என்று விரும்புவதாகச் சொன்னார் இந்திரா.

அப்போது ராஜீவ் காந்தி விமானம் ஓட்டிக் கொண்டிருந்தார்! அரசியல் அரங்கில் அடியெடுத்து வைத்திருந்தவர் சஞ்சய்தான். அவரிடம் ஒட்டுதலாய் இருந்த அருண் நேரு, சஞ்சய் காலமான பிறகு ராஜீவுக்கு நெருக்கமானார். நான்கு ஆண்டுகள் ராஜீவ் சென்ற இடங்களுக்கெல்லாம் நிழலெனப் பின் தொடர்ந்தார். நவம்பர் 1, 1984 — ராஜீவ் தலைமைப் பதவிக்கு யாரும் எதிர்பாராத விதமாக உயர்ந்தார். ராஜீவ், அருண் நேரு, ராஜீவின் கல்லூரி நண்பர் அருண் சிங் ஆகிய மூவர் அடங்கிய குழுதான் இன்று இந்தியாவை ஆள்கிறது எனலாம்.

பதவிக்கு வர நேரு குடும்பத்தைச் சேர்ந்த அடுத்த நபர் தயாராக இருப்பதால் இந்தியா நிம்மதியாக இருக்கலாம்!

கட்டுரை: **பேட்ரைஸ் க்னாட்.**
தமிழாக்கம்: **சீதா ரவி.**







# இளையராஜாவை

மதுரை மாவட்டத்தில் பண்ணைபுரம் என்று ஒரு ஊர். அங்கே அண்மையில் இளைய ராஜா சென்றிருந்தபோது ஓர் இளைஞன் முண்டியடித்துக் கொண்டு முன்னேறி அவரை நெருங்கினான். தனது இடக்கரத்தை நீட்டினான். அதில் ''இளையராஜா'' என்று பொறித்திருந்தது! 'பச்சை குத்தியிருக்கிறானோ?' என்று முதலில் நினைத்த இளைய ராஜா, சற்று ஆழ்ந்து பார்த்தபோது திடுக்கிட்டார்! இளைஞன் முகத்தை நிமிர்ந்து நோக்கினார்.

''ஆமாம், வலக்கரத்தில் கத்தி ஏந்தி உங்கள் பெயரை இடக்கரத்தில் செதுக்கிக் கொண்டேன்! ரத்தக் காயத்தின் வடுதான் இந்த ''இளையராஜா'' என்றான் இளைஞன் பெருமிதத்தோடு!



• பிரசாத் ஸ்டுடியோவில் தமது அறையில் இளையராஜா.

"'துளஸீதள முலசே ஸந்தோஷமுகா பூஜிந்து...' — இந்தப் பாடலைப் பாடியபோது தியாகையரின் மன நிலை என்னவாயிருந்தது? அது பற்றி இன்று நமக்கு என்ன ஸார் தெரியும்....?"

# வியக்க வைக்கும் இளையராஜா

இவர் வரும் வழியில் மலர் தூவி வரவேற்க வேண்டும் என்று அந்த ஊர் இளைஞர்கள் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இளையராஜாவின் அண்ணன், "அதெல்லாம் தம்பிக்குப் பிடிக்காது" என்று சொல்லிப் பார்த்தும் இளைஞர்கள் கேட்கவில்லை. உண்ணாவிரதம் இருந்து சம்மதம் பெற்றிருந்தார்கள்!

இதெல்லாம் இளையராஜாவை மிகவும் வருத்தமடையச் செய்தன. "ஏன் இந்த இளைஞர்கள் இப்படி இருக்கிறார்கள்?" என்று வருத்தம் தோய்ந்த குரலில் இப்போது என்னைக் கேட்டார் இளையராஜா.

நேரம் இரவு 9.30. இடம்: தி. நகரில் இளையராஜாவின் இல்லம். கவிஞர் வைரமுத்து அவர்களுடன் அவர் காரிலேயே நான் போய்ச் சேரவும் இளையராஜாவின் மனைவி பண்பும் அடக்கமுமாக வரவேற்கிறார். மகன் (எட்டு அல்லது பத்து வயதிருக்கும்) சுறுசுறுப்புடன் வரவேற்பு அறையை அடுத்திருக்கும் இசை அறையைத் திறந்து விடுகிறான். நீண்ட கூடம். சுவரில் பதிக்கப் பெற்ற கண்ணாடி அலமாரிகளில் பல ஷீல்டுகள். ஒரு பெரிய பியானோ. இதர பல இசைக் கருவிகள். இசைப்பதிவுக்குரிய எலக்ட்ரானிக் சாதனங்கள். தரையில் மிருதுவான ரத்தின கம்பளத்தில் நடந்து ஒரு மூலையில் உள்ள சோபாக்களில் அமர்கிறேன். இளையராஜா நட்புப் புன்முறுவலுடன் வருகிறார். உயரம் அதிகமில்லை. ஆனால் அந்த அகன்ற கண்களின் ஆழமும், பிரகாசமும் இந்த உருவத்தின் உயரத்துக்கும் அதில் குடி கொண்டிருக்

கும் ஆற்றலுக்கும் சம்பந்தமில்லை என்பதை உணர்த்துவதுபோல் ஜொலிக்கின்றன!

''ஆமாம் ஹீரோ ஒர்ஷிப் என்கிற தனி நபர் வழிபாடு சரியில்லைதான்'' என்று எனது அபிப்ராயத்தை நான் கூறவும் உடனே இளையராஜா என்னை இடைமறித்து, ''நான் அதைப் பற்றியெல்லாம் தீர்ப்பு வழங்கத் தயாராக இல்லை. என் அளவில் நான் பேசுகிறேன். நான் இப்படியெல்லாம் வழிபடப் படுவதற்குத் தகுதி உடையவன் அல்ல. அதை இந்த இளைஞர்களுக்கு எழுதித் தெரிவியுங்கள்!'' என்றார்.

இப்போது நான் திடுக்கிட்டுப்போய் இளையராஜாவை ஏறிட்டுப் பார்த்தேன்!

''இளைஞர்கள் உங்களை வழிபட வேண்டாம் என்று நீங்கள் கூறுவதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் உங்களுக்குத் தகுதி இல்லை என்பதை நான் எப்படி ஒப்புக்கொள்வது?'' என்று நான் வாதம் புரிந்து பார்த்தேன். அந்த வாதத்திலிருந்து எனக்குப் புரிய வந்த விஷயம் என்னவென்றால், இளையராஜா ஏதோ அவையடக்கமாக இதைப்பேசவில்லை. 'அடக்கமாக இருக்கிறேன் என்ற எண்ணமே ஒரு கர்வமாகிவிடக்கூடும்' என்ற உணர்வு கூட அவருக்கு இருப்பதை நான் அறிய முடிந்தது. அப்படியானால் இளையராஜா தம்மைப் பற்றி என்னதான் நினைக்கிறார்? கேள்வியை புரட்டிப் போட்டேன்:

''அப்படியானால் உங்களை வியக்க வைக்கிற இசையமைப்பாளர் யார்?''

''சந்தேகமில்லாமல் இளையராஜாதான்! அந்த ஒருவரைப் பார்த்துத்தான் தினமும் வியந்து கொண்டிருக்கிறேன்!'' என்றார் இளையராஜா.

''ஒன்றும் தெரியாத இவனிடமிருந்து எப்படி இவ்வளவு விஷயங்கள் வெளி வருகின்றன என்று வியக்கிறேன்! விஷயம் தெரிந்தவர்கள் இசை அமைப்பதில் என்ன ஆச்சர்யம் இருக்கிறது?

இதிலிருந்து நாம் ஒரு முடிவுக்குத்தான் வரமுடிகிறது. தெய்வீக அருள், வரப்பிரசாதம் என்றெல்லாம் பேசுகிறோம் இல்லையா? அப்படி இளையராஜாவிடம் இசைத் திறன் குடிகொண்டிருக்கிறது. இதுதான் நமக்குப் புரிகிற உண்மை. அதைப் பார்த்து அவரே வியந்து கொண்டிருக்கிறார். அவரிடம் மேதா விலாசம் இருப்பதை அவருடன் சில நிமிஷங்கள் பழகினாலே நாம் உணர்ந்தறிந்து கொண்டுவிடுகிறோம். ஆனால் அந்த மேதா விலாசம் இசைக் கல்லூரியில் படித்தோ, குருவிடம் பாடம் கேட்டோ, டாக்டரேட்டுக்கு ஆராய்ச்சி செய்தோ பெறப்பட்டதில்லை. மாறாக, உள்ளத்திலிருந்து பிரவகிக்கிற தெய்வானுக்கிரகம் என்பதைத் தவிர, வேறு விதமாக வர்ணிக்க நமக்குத் தெரியவுமில்லை, தோன்றவுமில்லை. இளையராஜாவோ ''என்னைப் பற்றி எனக்கே தெரியவில்லை; இன்னும் புரிந்து கொள்ள முயன்று கொண்டிருக்கிறேன்'' என்கிறார்!

இவருக்குத் தோன்றுகிற சில விஷயங்கள் இசை விற்பன்னர்களுக்குக் கூடச் செய்து பார்க்கலாமே என்று தோன்றுவதில்லை. உதாரணத்திற்கு சிந்து பைரவி படத்தில் ஆரோகணத்தில் மட்டுமே அமைந்த அந்தப் பாடல். மகாராஜபுரம் சந்தானம் மனம்விட்டுப் பாராட்டிய பாடல்.

இளையராஜாவைச் சந்தித்துப் பேசிய போது அவர் சாதனைகளின் முதல் படிகளில் தான் இன்னும் நிற்கிறார் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டது. அவருக்குக் கர்நாடக சங்கீதம், ஹிந்துஸ்தானி சங்கீதம், மேற்கத்திய மரபு சங்கீதம், ஜாஸ் இசை, ராக் அண்ட் ரோல் போன்ற பலவும் தெரிகிறது, புரிகிறது. அவர் மேஜை மீது, ''எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் மியூஸிக்'' என்ற ஆங்கில நூல் ஒன்று இருப்பதையும் பார்த்தேன்.

''இசைவிப்பது இசை. அவரவர் மனப் பக்குவத்துக்கு ஏற்ப ஒவ்வொன்றை ஏற்றுக் கொள்கிறார்கள்'' என்றார் இளையராஜா. ''வித்வான் மேடை ஏறிப் பாடுகிற தோடியைத்தான் ஒற்றைத் தந்தி தம்புரா சுருதியுடன் பரதேசியும் பாடுகிறான்'' என்று கூறி இரண்டையும் பாடிக் காட்டினார். ''அவன் வழி வேறு, இவன் வழி வேறு; பாடுவதிலே வித்தியாசம் தெரிகிறது என்பது உண்மை. ஆனால் ஆண்டிப்பண்டாரத்தின் பாட்டிலே அந்தப் பாடகன் இசைந்து போயிருக்கிறான் என்பதும் உண்மையல்லவா? அதைக் கேட்டு ரசிக்க நாற்காலியில் வந்தமரும் நானூறு ரசிகர்கள் இல்லாவிட்டாலும் நாலு பேராவது சூழ்ந்து நிற்பதும் உண்மைதானே?





அவர்கள் 'லெவலில்' அதை அவர்கள் ரசிக்கத்தானே செய்கிறார்கள்?''

இந்தப் பரந்த மனப்பான்மையும் அதிலுள்ள சத்தியமும் என்னைச் சிந்திக்க வைத்தன.

இளையராஜா தொடர்ந்தார்: ''இந்தப் பண்டாரம் மேடைப் பாடகனால் துச்சமாகக் கருதப் படுகிறான்; ஆனால் பண்டாரமோ மேடைப் பாடகனை வணங்கிக் கும்பிடு போடுகிறான். யார் உயர்ந்தவர்?''

''சரி, நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?''

''இசையில் அது உயர்ந்தது, இது தாழ்ந்தது என்று நினைப்பானேன், பேசுவானேன்? எல்லாமே இசைதான்! டப்பாங்கூத்து என்று நீங்கள் கருதலாம்; அதில் ஈடுபட்டிருப்பவன் அடைகிற இன்பத்தை நீங்கள் எப்படி உணர முடியும்?''

''அப்படிப் பார்த்தால் உலகமே இசை மயமானதுதானே! காலையில் பட்சி ஜாலங்களின் குரலொலி, இலைகளின் சலசலப்பு ஓசை, ஏன் சமீபத்தில் நாம் கேட்ட புயல் காற்றின் 'உய்ய்' என்ற ஒலிகூட நம் மனங்களை ஈர்க்கின்ற இசைகள்தானே?''

''ஆமாம் ஆமாம்'' என்பதுபோல் தலையசைத்துப் புன்னகை புரிந்தார் இளையராஜா.

''பண்ணைபுரத்தில் பாவலரின் 12ம் நினைவு நாள் விழா. இவர் கலை நிகழ்ச்சிக்கு ஏகக் கூட்டம்'' என்றார் வைரமுத்து. ''பல லட்சம் மக்கள் மதுரை மாவட்டத்தின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் வந்திருந்தார்கள். அந்த ஜன சமுத்திரத்தின் கடைசி வரிசையில் இருந்தவர்கள் என் கண்ணுக்குத் தெரியவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!''

''என் இசை நிகழ்ச்சிக்கு அப்படி கூட்டம் வருவதில் அதிசயமில்லையே?'' என்றார் இளையராஜா. ''நான் சினிமா மூலம் பிராபல்யமும் புகழும் அடைந்திருக்கிறேன். மக்கள் வருகிறார்கள். வராமலிருந்தால்தான் அதிசயம்! இதில் பெருமைப்பட என்ன இருக்கிறது?''

அவருடைய தனிப் பார்வை மறுபடி எனக்கு வியப்பை அளித்தது. 'இப்படியும் ஒரு மனிதரா?' என்று எண்ணியபடியே, ''சில காலம் முன்னால் நீங்கள் இப்படி இருக்கவில்லை; ஏற்கெனவே ஒருமுறை கல்கியில் உங்கள் வண்ணப் படம் மேலட்டையில் பிரசுரமாகியது. அப்போது இந்தியாவின் பல திசைகளிலிருந்தும் கல்கி வாசகர்கள் உங்களுடன் ட்ரங்க்கால் போட்டுக்கூடப் பேசினார்கள். அவர்களுடன் நீங்கள் பேசியதெல்லாம் கல்கியில் பிரசுரமாயிற்று. நினைவிருக்கிறதா.....? இப்போது உங்கள் நோக்கு, போக்கு எல்லாவற்றிலும் பெரிய மாற்றம் காணப்படுகிறது....''

''அது தளர் நடை பயிலும் பருவம்'' என்றார் இளையராஜா. ''குழந்தை நடை வண்டி தள்ளி நடக்கும். நாம் கைதட்டி அதை உற்சாகப்படுத்துவோம். அது சிரித்துக்கொண்டு நம்பிக்கையோடு இன்னும் நாலு அடி எடுத்து வைக்கும். அதே குழந்தை வளர்ந்து, உயர்ந்து, ஆளான பிறகு நடக்கும்போது, கைதட்டி உற்சாகப்படுத்தினால் அபத்தமாயிருக்குமில்லையா?''

அவரது இசையோடு அவரது உள்ளமும் வளர்ந்து, உயர்ந்து, பக்குவப்பட்டிருப்பதைப் புரிந்து கொண்டேன். ''இவ்வளவு தூரம் வளர்ந்துவிட்ட நீங்கள் எதற்காகப் படம் முழுவதற்கும் இசை அமைக்கச் சம்மதிக்கிறீர்கள்? பாட்டுக்கு இசை அமைத்துத் தருவதோடு நிற்கலாமே?''

''அப்படி நிறுத்திக் கொள்ள முடியுமென்றால் என்னைவிட மகிழ்ச்சி அடையக் கூடியவன் யாருமில்லை. ஆனால் புரொட்யூஸர்கள் இதற்குச் சம்மதிப்பதில்லையே? நீங்கள் ஒரு மோசமான படத்தைப் பார்க்க நேர்ந்தால் கூட அந்த ஒரு தடவை பார்ப்பதோடு சரி; ஆனால் நானோ நாலு தடவை அதைப் பார்த்தாக வேண்டும், இசை அமைக்கும் போது. எப்பேற்பட்ட தண்டனை!''

''அதற்கும் சேர்த்துத்தானே பணம் வாங்கி விடுகிறீர்கள்!'' என்றார் வைரமுத்து விளையாட்டாக.

''அபராதம் வசூலித்துவிடுகிறார் என்றும் சொல்லலாம்'' என்றேன் நான்.

''நீங்கள் அடிப்படையைக் கவனிக்க வேண்டும்'' என்றார் இளையராஜா. ''புரொட்யூஸர்கள் ஏன் என்னை இசை அமைக்கச் சொல்கிறார்கள்? அவர்களுக்குத் தெரியும், ஒரு சாதாரண படத்தைக்கூட இளையராஜாவின் இசை வெற்றி பெறச் செய்து விட முடியும் என்று!''

''அப்படியானால் இசை அமைப்பாளர் ஒரு படத்தைக் கெடுத்துத் தோல்வியடையவும் செய்ய முடியுமில்லையா?''

''ஒரு உயர்ந்த படத்தை இசையமைப்பாளரால் கெடுக்க முடியாது. அவனுக்குக் கெட்ட பெயர் வந்து சேர்வதோடு சரி! ஆனால் ஒரு சராசரி படத்தை இசையமைப்பாளன் உயர்த்தவும் முடியும்; கெடுக்கவும் முடியும்... ஒரு உதாரணம் சொல்கிறேன்...'' என்று தொடர்ந்தார் இளையராஜா: ''அந்தப் படம்பெருவெற்றிபெற்றபடம்தான். ஆனால் தனிப்பட்ட முறையில் எனக்குத் திருப்தி தராத படம். ஆனாலும் அதற்கு நான் இசை அமைத்தேன். என் சொந்த விருப்பு வெறுப்புகளை ஒதுக்கி வைத்து விட்டுப் பணியில் இறங்கினேன். இறுதிக் காட்சிக்கு இசை அமைக்கும் போது டைரக்டர் உடன் இல்லை. ஏதோ அவசர காரியமாகப் போய்விட்டார். திரும்பி வந்து படத்தைப் போட்டுப் பார்த்தார். இசையையும் கேட்டார். அந்தக் காட்சியில் கதாநாயகனும் கதாநாயகியும் ''இறந்து'' போகிறார்கள். ஆனால் டைரக்டரோ ''காட்சிக்கு ''உயிர்'' கொடுத்தீர்கள்!'' என்று கண்ணில் நீர்ததும்பக் கூறினார்!

''எதற்காகச் சொல்ல வருகிறேன் என்றால், நான் ரஷ்ஷில் படம் பார்க்கும் போது எனக்கு ஏற்படுகிற பாதிப்புக்களை இசை அமைக்கிறேன். நான் படத்தில் என்ன புரிந்து கொள்கிறேனோ அதற்கேற்ப இசை கொடுக்கிறேன். அவர்கள் என்ன நினைத்து எடுத்தார்களோ எனக்குத் தெரியாது! ஆனால் அவர்கள் எண்ணியே பார்க்காத கருத்துக்களெல்லாம் கூட என் இசையில் வெளியாகும் போது அவர்களுக்கே திகைப்பாக இருக்கிறது! 'ஓ! இந்தக் காட்சி இந்த அளவுக்கு உயர முடியுமா?' என்று நினைக்கிறார்கள்... இப்போது சொல்லுங்கள் 'நான் பாடலுக்கு மட்டுமே இசை அமைப்பேன்; காட்சிகளுக்கு இசை அமைக்க மாட்டேன்' என்று எப்படி கூற முடியும்?''

'' 'இசை சிறப்பாக அமைந்தால் வசனமே வேண்டாம்' என்று பாலசந்தர் போன வாரம் கல்கி வாசகர்களுக்குக் கூறியதன் முழு அர்த்தமும் இப்போது புரிகிறது'' என்றேன்.

''முன்பெல்லாம் ஒரு பாட்டை இசை அமைக்க இருபது மணி நேரம் கூட ஆகியிருக்கிறது. இன்று ஒரு பாடல் மூன்று மணி நேரத்தில் முடிந்து விடுகிறது!'' என்றார் வைரமுத்து.

''அப்படியானால் முன்போல நீங்கள் பாடுபடுவதில்லை என்ற குற்றச்சாட்டு எழுமே? வேலைச் சுமை அதிகரிப்பதால் அடித்து விட்டுக் கொண்டு போகிறீர்கள் என்று பழி சுமத்துவார்களே?'' என்றேன்.

''அதெப்படிக் கூற முடியும்? இருபது மணி நேரம் உழைத்தாலும் மூன்று மணி நேரம் பாடுபட்டாலும் இசை வடிவம் என் மனத்தில் தோன்றுகிறதே, அதற்கு மூன்று வினாடிகள் கூட ஆவதில்லையே! அந்த மூன்று வினாடிகள் எந்தச் சமயத்தில் தோன்றுகிறது என்பதைப் பொறுத்துத்தான் ஒரு பாடலை இசை அமைக்க எடுத்துக் கொள்ளும் நேரமும் அமைகிறது! ஆக, இதெல்லாவற்றுக்கும் உள்ளார ஏதோ ஒரு தெய்வ பலம் வேலை செய்கிறது. அதை மூலாதார பலம் என்றும் கூறலாம்!''

உடனே எனக்கொரு சந்தேகம் எழுந்தது. ''தினம் பிரார்த்தனை செய்கிறீர்கள் அல்லவா?''





''செய்து வந்தேன், இப்போது செய்வதில்லை! என் உடல், மன, ஆரோக்கியத்துக்காகவோ அல்லது என் குடும்ப நலனுக்காகவோ பிரார்த்தனை செய்வதே ஒரு சுயநலம் என்று தோன்றுகிறது! 'உன் அருளால் உன்னை உணர' என்றுதானே பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்! அதை எண்ணிப் பார்க்கிறேன். அந்த மூலாதாரத்தின் அருள் இருந்தால் அவனை நான் உணர்வேன். பிரார்த்தனை எதற்கு?''

''எனக்குத் தினசரிப் பிரார்த்தனையினால் அமைதியும் சாந்தியும் கிடைக்கிறதே! அதை அனுபவ பூர்வமாக உணர்கிறேனே!'' என்றேன்.

''நீங்கள் எப்படிப் பிரார்த்தனையைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்களோ அப்படியே அதற்கு அவசியமில்லை என்ற கருத்தை நான் பற்றிக் கொண்டிருக்கிறேன்! இரண்டிலுமே பற்றுதல் இருக்கிறது...! ஆனால் ஒன்று, நான் பேசுவதெல்லாம் என்னைப் பற்றித்தான். இதைப் பொது விதியாக நான் கூறுவதாகக் கொள்ளக் கூடாது!''

அவருடைய மனம் எந்த அளவுக்குப் பக்குவப்பட்டுப் போயிருக்கிறது என்பது புரிந்த போதிலும் ''நம்முடைய கர்நாடக இசையில் இறையுணர்வுக்குத்தானே சிறப்பிடம்?'' என்று கிண்டி விட்டேன்.

உடனே, ''துளஸீ தள முலசே ஸந்தோஷமுகா பூஜிந்து'' என்று தியாகையரின் கீர்த்தனையைப் பாட ஆரம்பித்தார் இளையராஜா. மாயாமாளவ கௌளை என் மனமெல்லாம் நிறைந்து மாயம் செய்ய, என் கண்கள் பனித்தன.

பல்லவி வரை பாடிவிட்டு நிறுத்திவிட்டார் இளையராஜா. நான் ஏக்கத்துடன் ஏறிட்டுப் பார்த்தேன். ''இந்தப் பாடலைப் பாடிய போது தியாகையரின் மனநிலை என்னவாயிருந்தது? அதுபற்றி இன்று நமக்கு என்ன ஸார் தெரியும்?'' என்று கேட்டார் இளையராஜா. ''நீங்கள் என் பாட்டைக் கேட்டீர்கள்; ஆனால் தியாகையரின் அன்றைய மனநிலையை எவ்வாறு உணரப் போகிறீர்கள்? நானோ அல்லது இன்னொரு வித்வானோ மேடை ஏறி இதைப் பாடினால் எனக்குக் கணக்கு வழக்குத் தெரியும் என்று காட்டிக் கொள்ள முயல்வேன்; தொடையில் ஓங்கி அறைந்து தாளம் போடுவேன்; சுவரப் பிரஸ்தாரங்களைச் செய்து என் வித்வத்தைக் காட்டுவேன்; கமகங்களை உதிர்த்து என் குரல் வளத்தைப் புலப்படுத்துவேன்; போதாக் குறைக்கு எனக்கு நானே 'சபாஷ்' போட்டுக் கொள்வேன்! எல்லாம் என்... என்... என்... தான்! தியாகையர் எங்கே இருக்கிறார்? அவர் மனநிலையையும் உணர்வுகளையும் எங்கே, எப்படி, யார் புரிந்து கொள்ளப் போகிறார்கள்?''

'பாவத்தை ஒதுக்கிய சங்கீதம் பாவம் தான்' என்று நான் நினைக்க, வைரமுத்து கைக்கடிகாரத்தைப் பார்த்தார். ''நீங்கள் இன்னும் சாப்பிடாமல் கூட எனக்காக நேரம் ஒதுக்கித் தந்தீர்கள். இரவு மணி பத்தரையாகிவிட்டது. களைத்துப் போயிருக்கிறீர்கள்'' என்றேன்.

''இன்றைக்கு ஒரே சமயத்தில் இரண்டு படங்களுக்கு இசை அமைத்திருக்கிறார். களைப்பாகத்தான் இருக்கும்'' என்றார் வைரமுத்து.

''அதெப்படி ஒரே சமயத்தில்...?'' என்று நான் சந்தேகமாக வினவினேன்.

''இங்கே இரண்டு மணி நேரம் மியூஸிக் ஸெட் பண்ணிக் கொடுத்துவிட்டு அது ரிகார்டிங் ஆகும்போது பக்கத்தில் உள்ள இன்னொரு ஸவுண்ட் ஸ்டுடியோவுக்குப் போய் அங்கு வேறு படத்தின் ரஷ்ஷஸ் பார்த்து இசை அமைப்பார். திரும்பி வந்து முதலில் ரிகார்ட் ஆனதைச் சரிபார்த்துவிட்டு மேலே தொடர்வார்...

''என்ன செய்வது? இரண்டு புரொட்யூஸர்களுமே ரிலீஸுக்குத் தேதி குறித்து விட்டு





அவசரப்படுகிறார்கள். அவர்கள் மனம் நோகச் செய்ய இஷ்டமில்லை...''

அவரது இசைத் திறனை மட்டுமின்றி உழைப்பார்வத்தையும் ஒருங்கே உணர்த்துகிற இந்த விஷயம் என்னை மேலும் வியப்பில் ஆழ்த்தியது. ''ஓயாத வேலை என்றால் அலுப்பு சலிப்பு ஏற்படாதா? ஒரு மாறுதலுக்காக, ஹாபியாக எதை வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''இசை அமைக்கிறேன்'' என்றார்.

''என்னது!''

''ஸ்டுடியோவில் புரொட்யூஸர்களுக்காக இசை அமைக்கிறேன். ஸ்டுடியோ வேலையை வீட்டுக்குக்கொண்டுவந்து ஹோம் ஒர்க் ஏதும் செய்வதில்லை. வீடு திரும்பிய பிறகு எனக்காக இசை அமைக்கிறேன்! இங்கே என் மனோதர்மப்படி இசையில் புதிய புதிய பரிசோதனைகளைச் செய்து பார்க்கிறேன்!''

''அதெப்படிப் புதிய பரிசோதனைகளைச் செய்வதென்றால் இசை மரபுகளை இஷ்டத்துக்கு மாற்றுவதா?''

''ஏன், மாற்றினால் என்ன? மரபை மீறுவதையே ஒரு மரபாக்கிக் காட்டினால் என்ன? அப்படி மீறவில்லை என்றால் புதிய இசை வடிவங்கள் எப்படித் தோன்றும்?''

விடைபெற எழுந்து நின்று கொண்டிருந்தவன் என்னையறியாமல் மறுபடி உட்கார்ந்து விட்டேன்! ''உங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால்...''

''டேப் போட்டுக் காட்டுகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. இதுபற்றி நீங்கள் எதுவும் விவரித்து எழுதக் கூடாது. இதுபற்றி எழுதப்பட வேண்டிய நேரம் இன்னும் வரவில்லை!''

''சரி'' என்று ஒப்புக் கொண்டேன். அவர் டேப் ரிகார்டரை இயக்கச் சென்ற போது, ''இவருடைய ஆற்றலில் பத்து சதத்தைக் கூட திரைப்பட உலகம் பயன்படுத்திக்கொண்டிருப்பதாகத் தோன்றவில்லை'' என்றேன். ''உண்மை, உண்மை'' என்று ஒப்புக் கொண்டார் வைரமுத்து. ''இவரை முழு அளவில் பயன்படுத்திக் கொள்கிற ஆற்றலுடைய டைரக்டர் நம்மிடையே இல்லை.''

இதற்குள் டேப் ஒலிக்கத் தொடங்கிவிட்டது. அந்த இசையோடு கூடவே என் பக்கத்தில் இருந்த இளையராஜா பாடிக் கொண்டும் இருந்தார். ஆனால் நான்தான் இந்த உலகத்திலேயே இல்லை! தேவலோகம், சொர்க்க லோகம், கந்தர்வ லோகமெல்லாம் விட உயர்ந்ததான ஓர் இசை உலகில் ஒரு பரமானந்த நிலையில் சஞ்சரித்துக் கொண்டிருந்தேன்!

டேப் முடிந்தது. ஆனால் இசை முடியவில்லை. அது என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டே இருந்தது. அதில் மிதந்தவாறே நடந்து வாசலில் வைரமுத்துவின் காரில் ஏறி வீடு வந்து சேர்ந்தேன். இரவெல்லாம் அந்த இசையை உள்ளம் எதிரொலிக்கக் கேட்டுக் கொண்டே இருந்தேன். என்றேனும் ஒரு நாள் அது உலக அரங்கில் ஒலிக்கும்; தமிழகத்தின் பெருமையை உயர்த்தும்.

— கி. ராஜேந்திரன்.

புகைப்படங்கள்,

மேலட்டை வண்ணப்படம்: யோகா.

---

22 வயது முகம்மது ஹனீபா' திருவனந்தபுரம் மத்திய சிறைச்சாலையில் ஆயுள் தண்டனைக் கைதி! விஞ்ஞானத்தில் முதல் வகுப்பில் தேறிப் பட்டம் பெற்ற இவர், சமீபத்தில் போலீஸ் காவலுடன் வந்து ஒரு பரீட்சை எழுதிவிட்டுப் போனார்! நன்றாக எழுதியிருக்கிறாராம்! இவர் எழுதிய பரீட்சை; சப் இன்ஸ்பெக்டர் பதவிக்கு!

— சம்பத் குமாரி.

ஆதாரம்: 'ஸண்டே.'



### சூட்சுமம் புரிந்தது!

பாண்டியராஜனுக்குச் சினிமாவின் சூட்சுமம் புரிந்துவிட்டது.

பொழுது போவதற்காகச் சினிமா வருபவனை இரண்டு நிமிடத்திற்கொரு தரம் சிரிக்க வைக்க வேண்டும் என்ற பிடிவாதம் இருக்கிறது.

நெட் ரிஸல்ட்: நமக்கு சுவாரஸ்யமான இரண்டரை மணி நேரம்.

### விளையாட்டுத்தன க்ளைமாக்ஸ்!

'பெண் பார்த்துவிட்டு வாடா' என்று அப்பா பக்கத்து ஊருக்கு அனுப்ப, பிள்ளை தவறுதலாய் வேறு வீட்டுக்குப் போய்ப் பெண் பார்த்துவிட்டு வந்துவிட, அந்தப் பெண்ணை இவனுக்கும், இவனை அந்தப் பெண்ணுக்கும் பிடித்துப் போகிறது. ஆரம்பமாகிறது பிரச்னை. ஆள் மாருட்டம் என்று தெரிந்தவுடன் இரண்டு வீட்டிலும் அவர்களுக்கு எதிர்ப்பு. ரகசியச் சந்திப்புகள், பார்க்காமல் விட்டுப் போனவள் விரக்தியில் தற்கொலை முயன்று ஊமையாகிப் போக, இவளா, அவளா என்று நாயகன் சோகத்தில் தடுமாற, கொஞ்சம் விளையாட்டுத்தனமான க்ளைமாக்ஸ். சுபம்.

### துடுக் — வெடுக் — சிரிப்...

அறிமுக சீதாவிற்குக் கொஞ்சமே கொஞ்சம் காமிரா பயம் இருக்கிறது. பாண்டியன் ஜஸ்ட் சமாளிக்கிருர். ரொம்ப லேட்டாய் வந்தாலும் ரேவதி சம்பந்தப்பட்ட காட்சிகள் துடுக் — வெடுக் — சிரிப்.

### தூள் கற்பனை!

படத்தின் ப்ளஸ் பாயிண்ட்களில் திரைக் கதை வசனம் மட்டுமல்லாது ஜனகராஜும் உண்டு. அண்ணன் சினிமாக் கொட்டகை திறந்து கொடி கட்டிப் பறப்பதைப் பார்த்து ரெஸ்ட்டாரண்ட் ஆரம்பித்துச் சூடு போட்டுக் கொள்ளும் காட்சிகள் அமர்க்களம். அதுவும் ஒரு மகா எத்தன் ஆயிரம் லட்டுவுக்கு ஆர்டர் செய்துவிட்டு துணிக் கடையில் போய் ஆயிரம் ரூபாய்க்குச் சரக்கு வாங்கிக் கொண்டு இரண்டு பேரையும் டபாய்க்கும் காட்சி தூள் கற்பனை. ஹோட்டலில் வீடியோ பார்க்க விளக்கணைத்து விடச் சாப்பிட வந்தவர்கள் ஆளுக்குக் கொஞ்சமாய் அமுத்திக் கொண்டு கிளம்பும் ஸீனும் அட்டகாசம்.

### புது ஐடியா!

பாண்டியனுக்குத் தம்பியாய் நடிக்க வந்திருக்கும் பாண்டியராஜன் (டைரக்டர்தான்) இயல்பாய் நடிக்கிருர்தான் — இருந்தாலும் சினிமாவுக்கு இந்த முகம் ஏற்றதுதானு?

ஆண்கள் மட்டுமே இடம் பெறும் குரூப் டான்ஸ் புது ஐடியா. இன்னும் கொஞ்சம் கவர்ச்சிகரமாய் இருந்திருக்கலாமோ?

### டொமுக் — டொமுக் — டம்—டம்

இளையராஜாவின் பின்னணி இசை டொமுக் — டொமுக் — டம்—டம். பாடல்களில் குயிலே குயிலே காதுக்கு நினைவிருக்கிறது.

— ஜெயமன்மதன்.

# ஆண்பாவம்



இ.காங்கிரஸ்






தமிழ்நாடு
முயற்சி

அமிர்தலிங்கம்

ஈழப்
போராட்டக்காரர்கள்

இலங்கை
ராணுவம்

பேச்சு
வார்த்தை

நீங்க டென்னிஸ்
மட்டையாலே விளையாடுங்க..
நான் துப்பாக்கியாலே
விளையாடறேன்!



கல்கி

1985 டிசம்பர் 29
மலர் 44 இதழ் 22
குரோதன மார்கழி 14



# பிரதமர் வழங்கிய புத்தாண்டுப் பரிசு!

ராஜீவ் காந்தி பிரதமராகப் பொறுப்பேற்றபின் நாட்டின் தொழில் வளர்ச்சிக்கும் பொருளாதார மேம்பாட்டுக்கும் யதார்த்த நோக்கில் பல முற்போக்கான காரியங்களைச் செய்து வருகிறார். அவருடைய நிதி அமைச்சர் திரு. வி. பி. சிங் சமர்ப்பித்த முதல் பட்ஜெட்டே ஆட்சியில் மட்டும் மாற்றம் ஏற்பட்டு விடவில்லை, கொள்கைகளிலும் ஆரோக்கியமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பதை உணர்த்தியது. சில அக்கிரமமான் அநீதியான வரிகளையும் டெபாஸிட்களையும் ஒழித்துக் கட்டியே விட்டார். கூடவே பல வரிச் சலுகைகளையும் வழங்கினார். தவிர, தொழில் வளர்ச்சிக்குத் தடையாக இருந்த பல கட்டுப்பாடுகளும் (கண்ட்ரோல்கள்) நீக்கப்பட்டன. மூச்சுத்திணறிக்கொண்டிருந்த தொழில் துறைக்குப் பிராணவாயு வழங்கியது போலாயிற்று. வரிச் சலுகைகள் காரணமாக அரசுக்கு வருமானம் குறைந்து போய்விடாது என்பது ஏற்கெனவே நிரூபணமாகி விட்டது. வரி வசூல் வேகம் முன்னிலும் மிகவும் அதிகரித்துள்ளது. நியாயமான அளவில் வரி விதித்தால் குடிமகன் வரி ஏய்க்க முயல மாட்டான் என்ற கருத்து மெய்யாகி உள்ளது.

வரிச் சலுகைகள் பல அளித்த பிறகும் வரி ஏய்க்க நினைப்பவர்கள் மீது அவர்கள் எப்பேர்ப்பட்ட தொழில் வர்த்தகப் பெரும்புள்ளியானாலும் சரி, பணமுதலையானாலும் சரி, கடுமையான நடவடிக்கை எடுக்க மத்திய அரசு தயங்கவேயில்லை. இதற்குண்டான தார்மீக பலத்தை மத்திய அரசின் உயர்மட்டத் தலைவர்கள் பெற்றிருப்பது தெளிவாகிறது. காரணம், அவர்கள் கை சுத்தமாக இருப்பதுதான். அது என்றுமே இப்படி இருக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். வரி ஏய்ப்பவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுத்து வரி வசூல் செய்யும் அதிகாரிகளுக்கு ஊக்கத் தொகை வழங்கப்படுகிறது. இரண்டு கோடி ரூபாய் உற்பத்தி வரி ஏய்ப்பைக் கண்டுபிடித்த அதிகாரி ஒன்றேகால் லட்ச ரூபாய் சன்மானம் பெற்றுள்ளார். வேறு பலரும் பரிசு பெற்றுள்ளனர்.

இதெல்லாவற்றையும்விட மிக முக்கியமான ஒரு நடவடிக்கையை மத்திய அரசு மேற்கொண்டுள்ளது. உற்பத்திக்கு உதவாத அரசாங்கச் செலவினங்களைக் கட்டுப்படுத்தியே ஆகவேண்டும் என்ற பிடிவாதத்துடன் இந்த ஆண்டு 800 கோடி ரூபாய் செலவைக் குறைத்திருக்கிறது! இந்தச் சிக்கன நடவடிக்கை மிகப் பெரிய சாதனை.

இந்த ஆரோக்கியமான நடவடிக்கைகளின் உச்சமாக அடுத்த ஐந்தாண்டுகளுக்கான பொருளாதாரக் கொள்கையை அறிவித்துள்ளார் நிதி அமைச்சர். இனி-ஒவ்வொரு ஆண்டும் பட்ஜெட் சமயத்தில் என்ன புதிய வரிகள் விதிக்கப்படுமோ எப்படி வரி விகிதங்கள் உயருமோ என்று கையைப் பிசைந்து கவலைப்பட்டுக் கொண்டிருக்க அவசியமில்லை! எனவே, தொழிலகங்கள் அடுத்த ஐந்தாண்டுகளுக்கான தங்கள் வளர்ச்சித் திட்டங்களைத் திட்டலாம்; அமுல்படுத்தலாம். தனி நபர்கள் தங்கள் வருவாயைத் திட்டமிட்டு முதலீடு செய்யலாம். இது எவ்வளவு பெரிய வசதி! வரவு செலவு பட்ஜெட் வழக்கப்படி பின்னால் வரும் என்றாலும் நிதித் துறையில் என்னென்ன சீர்திருத்தங்களைச் செய்ய மத்திய அரசு தீர்மானித்துள்ளது என்பதை இந்தப் பொருளாதாரக் கொள்கை பட்டியலிடுகிறது. உற்பத்தி வரிகளிலும் சுங்க வரிகளிலும் நிறுவனங்களுக்கு விதிக்கப்படுகிற வருமான வரிகளிலும் பல சலுகைகள் உத்தேசிக்கப்பட்டுள்ளன. புதிதாகச் செய்யப்படுகிற முதலீடுகளுக்குக் காண்பிக்கப்படும் சலுகைகள் திருத்தி அமைக்கப்பட இருக்கின்றன. தனி நபர்களின் வருமான வரி, செல்வ வரிகளைப் பொறுத்தமட்டில் இன்றுள்ள நிலையே ஐந்தாண்டுகள் நீடிக்கும். ஆயினும், வருமான வரி செலுத்துவோரில் அடிமட்டத்தில் உள்ளவர்களுக்கு மேலும் சலுகைகள் தேவையா என்பது அவ்வப்போது பரிசீலிக்கப்படும்.

தவிர, இன்னும் பல ஆரோக்கியமான நடவடிக்கைகளையும் உள்ளடக்கிய நிதியமைச்சரின் பொருளாதாரக் கொள்கை அறிக்கையைத் தேசத்துக்குப் பிரதமர் ராஜீவ் வழங்கியுள்ள புத்தாண்டுப் பரிசு எனலாம்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



# நடந்த விஷயமென்ன?

## ஈ.வெ.ரா – சி.ஆர். சந்திப்பு

**இந்த நாளில் எதிர்க்கட்சியினரை நேரில் பார்த்தால் கூடப் பார்க்காதது மாதிரி போய்விடுகிற வழக்கம் இருக்கிறது; இது தவறு. கருத்து மாறுபாடு இருந்தாலும் நட்பு உறுதியாக இருக்க முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்கள் பெரியாரும் ராஜாஜியும். இந்த நட்பு எத்தகையது, எவ்வளவு ஆழமானது என்பதை ஈ. வெ. ரா. அவர்களே தமது கட்டுரை ஒன்றில் விவரிக்கிறார். ஐம்பதாண்டுகளுக்கு முற்பட்ட அந்தக் கட்டுரையைத் தேர்ந்தெடுத்து 'கல்கி'யில் பிரசுரிக்கக் கொடுத்தவர் திரு. வீரமணி.**

**தோ**ழர் சி. ராஜகோபாலாச்சாரியார் அவர்களும் நானும் குற்றாலத்தில் கண்டு பேசிய விஷயம் தமிழ்நாடு பத்திரிகை உலகத்தில் மிகப் பிரமாதப்படுத்தப்பட்டு விட்டது.

என்னைச்சந்திக்கும்ஒவ்வொருவரும் முதலில் இந்த விஷயத்தைக் கேட்டுவிட்டே மரியாதைக்கு விசாரிக்கும் க்ஷேமலாபங்களைக் கூட விசாரிக்கிறார்கள். சந்திக்க முடியாத அனேகம் பேர்கள் உள்ளத்திலும் இந்த எண்ணமேஇருக்கும்என்பதில்ஆக்ஷேபணை இருக்க நியாயமில்லை.

ஆகையால் அதை விளக்கி விடுகிறேன். பத்திரி கை நிருபர்கள் பலா என்னை விசாரித்தார்கள். நான் அது ஒன்றும் அவ்வளவு முக்கியமானதல்ல என்றே பதில் சொல்லிவிட்டேன். நிருபர்கள் சேதியில் 100 க்கு 90, என் விஷயத்தைப் பொறுத்தவரை, திரித்தும் பிசகாயும் மாற்றியுமே எனக்கு காணப்படுகின்றன. ஆதலால் நானே குறிப்பிட்டுவிடுகிறேன். எங்கள் சம்பாஷணை ஒன்றும் உண்மையிலேயே அவ்வளவு குறிப்பிடக் கூடியதல்ல. ஆனால் கவனிக்கக் கூடியதேயாகும்.

எனக்குப் பொதுவாக தோழர் சி. ராஜகோபாலாச்சாரியாரிடம் எப்போதுமே மரி

யாதை உண்டு. அவருக்கும் என்னிடம் அன்பு உண்டு என்றே கருதிக் கொண்டிருக்கிறேன். அதாவது நான் அவரது அன்புக்குப் பாத்திர மானவன் என்கின்ற கருத்தில்.

ஆச்சாரியாரைப் பற்றி அரசியல் விஷயத் தில் பொதுநல விஷயத்தில் எவ்வளவு மாறு பட்ட அபிப்பிராயம் கொண்டிருந்தாலும், கண்டித்துப் பேசியும் எழுதியும் வந்தாலும், தனிப்பட்ட விஷயத்தில் அவரை எனது மரியாதைக்கு உரியவர் என்றே கருதி இருக் கிறேன்.

நாங்கள் பொது வாழ்வில் நுழைவதற்கு முன் அவர் சேலம் சேர்மனாயும் நான் ஈரோடு சேர்மனாயும் இருக்கும்போதே எங்களில் ஒருவருக்கொருவர் நம்பிக்கை யுள்ள மாதிரியில் நெருக்கமுள்ளவர்களாய் இருந்ததோடு இருவரும் சொந்த வாழ்க் கையை அலட்சியம் செய்து பொது வாழ்வில் தலையிடுவது என்கின்ற அருத்தத்தின் மீதே சற்றேறக்குறைய ஒரே காலத்தில் இருவரும் சேர்மன் பதவியையும் மற்றும் உள்ள சில கவுரவ பதவிகளையும் ராஜினாமா செய்து விட்டுத் தோழர் வரதராஜுலுவும் உள்பட நெருங்கி கலந்து இருந்தோம். பிறகு ஒத்துழை யாமை ஆரம்பமானவுடன், நான் அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலி போலவே இருந்து வந்தேன்.

எங்களுக்குள் வெகுநாள் ஒத்துழையாமை யில் அபிப்பிராய பேதமே இல்லாதிருந்தது. அவர் இஷ்டத்தை அறிந்து, அதுவே என் அபிப்பிராயம் போல் காட்டி அவரை இணங் கச் செய்வதுபோல் ஒவ்வொரு விஷயத் திலும் நடந்து கொள்வேன். அதனாலேயே அனேகர் என்னைக் கண்டு விட்டே அவரைக் காணுவார்கள்.

அப்படிப்பட்ட நிலை, வகுப்பு உணர்ச்சி காரணமாகவே இருவருக்கும் மாற்றம் அடைய நேரிட்டுவிட்டது. அதன் பிறகு பல சம்பவங்கள் ஏற்பட்டுவிட்டன என்றாலும் அவரைக் காணும்போது என்னை அறியா மலே அவரிடத்தில் ஒரு மரியாதையும் பணி வும் ஏற்பட்டுவிடுகின்றன.

அவரைக் காணும்போது எப்படி மரியா தையும் பணிவும் ஏற்படுகிறதோ அதுபோல் ஒரு பரிதாபமும் ஏற்படாமல் இருப்ப தில்லை.

காரணம், எவ்வளவு பெரிய தியாகம் செய்தவர், அவ்வளவு தியாகமும் ஒரு பய னும் இல்லாமல் போகும்படியாய் விட்டதே பாவம், என்று பரிதாபப்படுவதுண்டு. என் றாலும் அவருடைய ஒவ்வொரு வார்த்தை யையும் இரண்டு மூன்று அர்த்தம் செய்து பார்க்காமல் நான் ஒரு முடிவுக்கு வருவ தில்லை. நான் பிரிந்துவிட்ட பிறகும் ஒரு சமயத்தில் சட்டசபைக்கு நிற்கும்படி என்னை வேண்டினார். இந்திய சட்டசபைக் கும் நான் நிற்பது நல்லது என்கிற ஜாடை யும் காட்டினார். எனக்கு வெற்றி, செலவில் லாமல் ஏற்படக் கூடும் என்கின்ற நம்பிக்கை யும் உறுதியும் இருந்தும் இந்த ஸ்தானங்க ளுக்கு அவருடைய ஆதரவில் செல்வது எனது வாழ்வைக் கெடுத்துவிடுமோ என்று அஞ்சியே மறுத்துவிட்டேன்.

இப்படி எல்லாம் இருந்தாலும் தற்கால அரசியல் புரட்டுகளை நான் அறிந்திருப்பது போலவே ஆச்சாரியார் அவர்களும் அறிந் திருக்கிறார் என்பதில் எனக்குச் சந்தேக மில்லை. இருகட்சிகளிலும் பெரிதும் சமய சஞ்சீவிகளே பயன் அனுபவித்து விடுவதும், நாம் ஒருவரை ஒருவர் துவேஷித்து முன் னேற ஒட்டாமல் தடுத்துக்கொண்டு இருப்ப தும், இந்தச் சந்தர்ப்பத்தில் பொதுமக்கள் நிலம் கொள்ளை போவதும் என்னை விட நன்றாய் உணர்ந்திருக்கிறார் என்பதே என் அபிப்பிராயம்.

இந்த நிலையில் என்னை அவர் கோய முத்தூர் ஜெயிலில் எதிர்பிளாக்கில் ஒரு கைதியாகச் சந்தித்தார். தோழர் சர். ஆர். கே. ஷண்முகம் அவர்கள் என்னை ஜெயிலில் சந்தித்த அதட்டியினாலும், தோழர் ஆச்சாரி யார் முயற்சியாலும் நான் ஆச்சாரியார் அறைக்குப் பக்கத்தில் அவருடைய சமைய லறை சாப்பாட்டில் இருக்க நேர்ந்தது.

அப்பொழுதும் எங்கள் பழைய கதைஞாப

---



பிரபல நகைச்சுவை நடிகரான ஜெர்ரி லூயி மளமளவென்று புகழேணியின் உச்சி யில் ஏறிக் கொண்டிருந்த காலம். அங்கே ஒருவர் "என்னை நினைவிருக்கிறதா உனக்கு?" என்று கேட்டார்.

"மன்னிக்க வேண்டும். யாரென்று தெரியவில்லை" என்று இழுத்தார் ஜெர்ரி.

"நான்கு வருடங்களுக்கு முன்னே நீ தினமும் என்னிடம் வந்து, 'உங்கள் படத் தில் நடிக்க எனக்கு ஒரு சான்ஸ் கொடுங் கள்' என்று மன்றாடுவாயே நினைவில்லை?"

"ஆமாம், ஆமாம் இப்போது ஞாபகம் வந்துவிட்டது.

"அது சரி, நீ இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று நிதான மாகக் கேட்டார் அந்தப் படாதிபதி!

ஜெர்ரி-மூர்ச்சையானார்.

— ப்ரியா பாலு.

# அடுத்த இதழில்:

PROGRESS REPORT:

# முதலாண்டின் முடிவில்...



☐ GOOD ☐ BAD ☐ FAIR ☐ VERY GOOD ☐ EXCELLENT

கத்துக்கு வந்ததுடன் இருவருக்கும் கண்களில் நீர் ததும்ப எங்கள் காதலைக் காட்டிக் கொண்டோம். எந்தக் கருத்தில் என்றால், எனக்கும் அப்படிப்பட்ட தலைவர் ஒருவர் கிடைக்க மாட்டார்; அவருக்கும் என்னைப் போல ஒரு தொண்டன் கிடைக்கமாட்டான் என்கின்ற உணர்ச்சிக் கருத்தில் என்றே சொல்லலாம். முடிவில், இருவரும் சேர்ந்து முன் போல ஒத்து உழைக்க முடியுமா என்கின்ற விஷயமாகவே பேசிப் பேசி ஒத்து உழைக்கச் சந்தர்ப்பம் ஏற்படக்கூடும் என்கின்ற நம்பிக்கை மீதே ஜெயிலில் பிரிந்தோம்.

அதற்குப்பிறகுஒருதரம்சந்திக்கநேர்ந்தும், இருவரும் சரிவர அந்த அபிப்பிராயத்தை வலியுறுத்திக் கொள்ளவில்லை.

பிறகு சுமார் 20 மாதம் பொறுத்து, நானும் தோழர்கள் பாண்டியன் முதலியவர்களும் குற்றாலத்தில் ஒருநாள் ஸ்நானத்துக்குப் போகையில், அங்கு நான்கு நாள் முன்னதாகவே சுகத்துக்காக போயிருந்த ஆச்சாரியார் அவர்கள் தன் ஜாகையிலிருந்தே என்னைக் கண்டார். பார்க்கவேண்டும் என்று சொல்லியனுப்பினார்: அருவியில் குளித்துவிட்டு அவர் ஜாகைக்குப் போனேன். அப்பொழுது மாலை 3 மணி. இருக்குமாதலாலும் நானும் என்தோழர்களும்அதுவரைசாப்பிடவில்லையாதலாலும் ஆச்சாரியார் அவர்களிடம் அதிக நேரம் பேச அவகாசமில்லை என்று சொல்லி அவசரமாய் விடை கேட்டேன். "ஏன் ஒரு நாள் சாவகாசமாக இங்கு தங்குவதுதானே" என்றார். நான், இப்போது சாவகாசமில்லை என்றும், மற்றொரு நாள் வருவதாயும் சொன்னேன். அவசியம் வர வேண்டும் என்றார். ஆகட்டும் என்றேன். அந்தப்படியே 15 நாள் பொறுத்து மறுபடியும் குற்றாலம் சென்றேன். அது சமயம் அவர் ஒரு வன போஜனத்துக்குப் புறப்பட்டுக் கொண்டு வீட்டின் முன்வாசலுக்கு வந்து விட்டார். என்னைக் கண்டதும் ஆசையாக வரவேற்றுவன போஜனத்துக்கு அழைத்தார். நான் பின் சென்றேன். செல்லுகையில் வழியில் சிறிது முன்னதாகச் சென்றுகொண்டு இருந்த நாங்கள் காதல் மிகுதியால் அர்த்தமற்ற வார்த்தைகளைப் பேசுவது போலப் பல விஷயங்களைக் கலக்கிக் கலக்கி அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பேசிக் கொண்டே சுமார் 1½ மைல் நடந்தோம். சங்கேத இடம் சென்று மற்ற எல்லோருடனும் சேர்ந்து சம்பாஷித்தோம். பிறகு வீட்டுக்குத் திரும்பி அன்று மாலையும் இரவும் கழித்தோம். தானாக வந்த விஷயங்களைப் பற்றித்தான் பேசினோமே ஒழிய குறிப்பாக எதையும் வருத்தி ஒன்றும் பேசவில்லை. இவைகளிலேயே அனேக விஷயங்கள் கலந்து கொண்டன.

முடிவு என்ன என்றால் இன்றைய இரு கட்சி கிளர்ச்சிகளும் எங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதும், சேர்ந்து இன்ன இன்ன காரியம்செய்தால்நாட்டுக்கும்சமூகத்துக்கும் நலன் ஏற்படும் என்பதும் பேசி ஒரு அபிப்பிராயத்துக்கு வந்த விஷயங்களாகும். அவரை விட எனக்கு, இருவரும் கலந்து ஒற்றுமையாய் ஒரு வேலை செய்யக் கூடிய காலம் வராதா என்கின்ற ஆசை ததும்பி இருந்தது.

அவ்வளவு பெரிய விஷயம் பேச அந்த சந்தர்ப்பம் போதாது என்கின்ற எண்ணமும் இருந்தது.

ஆனால் சில விஷயங்களில் இருவருக்கும் நேர்மாறான அபிப்பிராயம் இருப்பதும் அது விஷயத்தில் ஒத்து வர முடியாதே என்று பயப்படக் கூடிய அம்சங்களும் வெளியாயிற்று.

எப்படி இருந்த போதிலும் ஒரு சமயத்தில் கூடுவோம் என்கின்ற நம்பிக்கை குறையவில்லை.

இவ்வளவுதான் நாங்கள் கலந்து பேசியதின் தத்துவமாகும்.

— ஈ. வெ. ரா.

(நன்றி: குடியரசு, 14, ஜூன், 1936).

புகைப்படம்: சுபா.

# காதுக் கருவி... ..கிடைப்பதற்குள், காலமே முடிந்து போகும்!

தமிழக அரசின் சமூக நலத்துறை அறிவித்தபடி காது கேளாதவர்களுக்கு இலவச காது கேட்கும் கருவிகள் வழங்க, சென்ற 15.2.85, 16.2.85 ஆகிய இரண்டு நாட்கள் இங்கு அரசாங்க மருத்துவமனையில் பல ஆயிரக்கணக்கானவர்களுக்குப் பரிசோதனை செய்யப்பட்டது. சோதனைக்குப்பின் 'கருவி தேவை' எனக்கருதுபவர்களுக்கு மருத்துவரின் பரிந்துரையுடன் குறிப்பும் எழுதிக் கொண்டார்கள். வயதான முதியவர்களுக்கே முக்கியத்துவம் அளித்துப் பரிந்துரை செய்துள்ளார்கள். கருவியை ஆவலோடு எதிர்பார்த்து 10 மாதங்களாகியும் இன்னும் விமோசனம் பெறவில்லை. இக்கருவி உரியவர்களுக்கு வந்து சேருமுன் சம்பந்தப்பட்ட நபர் உயிருடன் இருப்பாரா என்றே எண்ணத் தோன்றுகிறது!

— வி.கே. துரைசாமி அய்யர், திருச்சி

## மூட நம்பிக்கைக்கு முடிவே இல்லையா?

ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்த ஒரு மகள் எனக்கு இருக்கிறாள். அவளுக்கு வரன் பார்க்கத் தொடங்கிய பிறகுதான் ஆயில்ய நட்சத்திரத்தில் அவள் பிறந்திருக்கவே கூடாது என்பது எனக்குத் தெரிய வந்தது! இவளை மணந்து கொண்டால் மணமகன் வீட்டிலே ஒரு விபரீதம் ஏற்படுமாம்! இந்த மூட நம்பிக்கை பற்றி முதன் முதலாக அறிய நேர்ந்ததும் எனக்குச் சிரிப்பதா அழுவதா என்றே புரியவில்லை. இப்படி ஒரு மூட நம்பிக்கை பரம்பரை பரம்பரையாக நம் மக்களின் மனங்களில் வேரூன்றியிருக்கக் காண்கிறேன். இதற்காகப் பழமொழிகளை வேறு தயாரித்து வைத்திருக்கிறார்கள்! இதே போல் மூல நட்சத்திரமும் உதவாது என்று பிறகு தெரிய வந்தது! இந்த விஞ்ஞான யுகத்தில் 21ம் நூற்றாண்டை நெருங்கிக் கொண்டிருக்கும்போது இப்படி அறியாமையும் நம்மை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது!

இந்த மூட நம்பிக்கையிலிருந்து விடுபட்டு பயமின்றி இந்த நட்சத்திரங்களில் சம்பந்தம் செய்து கொண்ட சிலர் சந்தோஷமாகக் கவலையின்றி இருப்பதையும் பார்க்கிறேன்.

'குலம் கோத்திரம் பார்த்தால் போதும்; ஜாதகங்களை நுணுகி நுணுகி ஆராய்ந்து கொண்டிருக்காதீர்கள்' என்று காஞ்சி முனிவரே எத்தனையோ தடவை எழுதியும் சொல்லியும் இருக்கிறார். அப்படியிருந்தும் நம் மக்களில் பலருக்கு இன்னமும் தெளிவு பிறக்கவில்லையே என்று எண்ணும்போது வருத்தமாய் இருக்கிறது. வரதட்சணைக் கொடுமை போதாது என்று இந்தத் தொல்லை வேறு!

— ஆர்.எச். ஷண்முகம், பம்பாய்.

## ஆறாயிரம் பேர் அவதி!

மத்திய அரசாங்கத்தின் தபால் தந்தி துறையில் வேலை பார்க்கும் ஒரு ஆர்.டி.பி. நான். தபால் துறையில் நான் வேலைக்குச் சேர்ந்து மூன்று வருடங்கள் முடிந்துவிட்டன. என்னைப் போன்று தபால் தந்தித் துறையில் வேலை பார்க்கும் ஆர்.டி.பி.க்களின் எண்ணிக்கை இந்தியா முழுவதுமாகச் சுமார் 6000.

எங்களை வேலைக்கு எடுக்கும்போது, இப்பொழுது இருக்கும் காலி இடத்திற்கு அல்ல, இனி வரும் காலி இடத்திற்காக, அதாவது, **Reserved Trained Pool** ஆட்களாக வேலைக்கு எடுத்தார்கள். இத்துறையில் எங்கள் சம்பளம் ஒரு மணிக்கு ரூ 2.75. இதில் ஒருநாள் 4 முதல் 7 மணிவரை வேலை கிடைக்கும். வேலை கிடைக்காத நாட்களும் உண்டு. நாலைந்து வருடங்களாக ஆர்.டி.பி. ஆக இருக்கிறவர்களும் உண்டு. இன்றுவரை எங்களுக்கு மத்திய அரசின் எந்தச் சலுகையும் கிடைக்கவில்லை.

தற்பொழுது **Ban** என்று ஒரு சட்டத்தைப் போட்டு இந்தச் சட்டம் இருக்கும்வரை நிரந்தர நியமனம் கிடையாது என்று கூறிவிட்டார்கள். தற்பொழுது இந்தச் சட்டத்துக்குக் காலவரையறை இல்லை. எங்களைப் போன்றவர்களுக்கு மட்டும்தான் இந்தச் சட்டம். உயர் அதிகாரிகளுக்குப் பதவி உயர்விற்கோ, அல்லது புதிய நியமனங்களுக்கோ தடை கிடையாது!

எங்கள் அலுவலகங்களில் ஓய்வு பெற்று எங்களைப் போல் ரூ 2.75க்கு வேலை பார்க்க வருபவர்கள் உண்டு. அவர்களுக்கு இரட்டிப்புவருமானம்! இப்படி அவர்கள் வேலைக்கு வந்தால் எப்படிப் புதிய ஆள் தேவைப்படும்? எல்லாச் சலுகைகள் பெறும் நிரந்தர அலுவலர் செய்யும் வேலைக்கும், நாங்கள் செய்யும் வேலைக்கும் வித்தியாசம் இல்லை. ஆனால் சம்பளம் மட்டும்?...

— வ. மேரிவிமலா, சிராயன்குழி.



சாண்டில்யன்

# சுதாஞ்சனி




## 22. இரண்டு ஓலைகள்!

சந்தியா கால பூஜைக்குத் தனது பட்டு வேஷ்டிகளை எடுத்து வைக்குமாறு சித்தரஞ்சனிக்கும் பாத்திரங்களைச் சித்தப்படுத்துமாறு சேனாதிபதி வஜ்ரபாகுவுக்கும் உத்தரவிட்டுக் கோவில் மண்டபத்திலிருந்து வெளிப்போந்த கௌதமிபுத்ரன், வாசிஷ்டி நதியின் முகத்துவாரத்தை நோக்கிச் செல்லாமல் மலையின் செங்குத்தான பாறைகளின் மறைவிலும் மரங்களின் மறைவிலும் நடந்து அஞ்சன்வேல் கரைக்கு நேர் இக்கரைக்கு வந்து நதியில் இறங்கி நீராடத் துவங்கினான். மலையின் புதர்களால் மறைக்கப்பட்ட ஓரிடத்தில் இறங்கிய சாதவாகனன் நீராடும் முகாந்திரத்தில் எதிர்க்கரையையும் கவனித்தான். அக்கரையில் கரையோரமாகச் சாக, யவன வீரர்களின் நடமாட்டம் மும்முரமாயிருப்பதையும், கோட்டைக்குள் சென்றும் மீண்டும் வெளி வந்தும் வீரர் பலர் அணி வகுத்துச் சித்தமாயிருப்பதையும் பார்த்து ஏதோ பலமான திட்டத்தை நாகபாணன் வகுக்கிறானென்பதையும் புரிந்து கொண்டான். சிறிது நேரத்துக்கெல்லாம் நாகபாணன் அக்கரையில் தோன்றிப் படகொன்றை எடுத்துக் கொண்டு நதியின் முகத்துவாரத்தை நோக்கிச் செல்வதையும் பார்த்து ஏதோ கடுமையான ஏற்பாட்டைச் செயலாற்றுவதில் இறங்கியிருக்கிறானென்பதையும் புரிந்து கொண்டதால் அதைப் பற்றிச் சிந்தித்த வண்ணமே அந்த மறைவான இடத்தில் நீராடியவன் நீண்ட நேரம் நீராட்டத்தை முடிக்காமலே நீரில் அமிழ்ந்து கிடந்தான். கடைசியில் அவன் நீராட்டத்தை முடித்துக் கொண்டு உடல் துவட்டிப் பட்டுக் கலை அணிந்து விபூதியும் தரித்துக் கொண்டவன், நாகபாணன் படகை நோக்கிக் கொண்டே நின்று கொண்டிருந்தான். நாகபாணன் மரக்கலத்தில் ஏறியதையும், சிறிது நேரத்திற்கெல்லாம் படகில் இறங்கிக் கோட்டையை நோக்கித் திரும்பி வரத்துவங்கியதையும் பார்த்தான். அதனால் ஏற்பட்ட தீர்க்க சிந்தனையுடன் கோவிலுக்குத் திரும்பினான்.

அவன் முகத்தில் காணப்பட்ட கவலை கலந்த சிந்தனையைக் கவனித்த சித்தரஞ்சனி, ''ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று வினவினாள்.

''விசேஷம் இருப்பதாகத்தான் தெரிகிறது. எதையும் இரவு ஏறியதும் புரிந்து கொள்ளலாம்'' என்று பதில் சொன்ன சதகர்ணி நேராகத் தாபிலேசுவரர் கர்ப்பக்கிருகத்துக்குச் சென்று பூஜையைத் துவங்கினான். சேனாதிபதி துலக்கி வைத்திருந்த பாத்திரங்களிலிருந்து தீர்த்தத்தால் தாபிலேசுவரருக்கு அர்க்யம், பாதம், இத்யாதிகளைச் சமர்ப்பித்து விட்டுக் கனி வர்க்கங்களையும் நிவேதனம் செய்தான். அவன் விளக்கு தீபமெடுத்து ஆரத்தி சமர்ப்பித்த சமயத்தில் சேனாதிபதி மணியைக் காடே அதிரும்படி அடித்தான். தீபாராதனை செய்து கொண்டிருந்த சதகர்ணி ''சேனாதிபதி! மணியை அடித்துக் கொண்டே இரு. அது அஞ்சன்வேலில் கேட்க வேண்டும்'' என்று உத்தரவிட, சேனாதிபதி தனது பலம் கொண்ட மட்டும் மணியைப் பிளந்து கட்டினான். பூஜையை முடித்து எல்லோருக்கும் பிரசாதத்தைக் கொடுத்த பிறகு, ''சேனாதிபதி! நீ சித்தரஞ்சனியை அழைத்துக் கொண்டு போய்ச் சண்டிகை குகைக்கு அருகில் இருக்கும் மலைவாசிகளிடம் விட்டு, பத்து பதினைந்து மலை வீரர்களை அழைத்துக் கொண்டு வா. அஞ்சன்வேல் கோட்டையை நான் கண்காணிக்கிறேன். தேவையிருந்தால் செயல்பட மலைவாசிகள் சிலரைச் சித்தப்படுத்தி வை'' என்று உத்தரவிட்டான்.

அதுவரை பேசாமலிருந்த சித்தரஞ்சனி, ''நான் எதற்காக மலைவாசிகள் இருப்பிடத்

திற்குப் போக வேண்டும்?'' என்று வினவினான்.

கௌதமிபுத்ரன் முகத்தில் கவலை படர்ந்தது. அந்தக் கவலை குரலிலும் ஒலிக்கச் சொன்னான் சாதவாகனன்; ''அஞ்சன் வேல் கோட்டைக்குப் போகாதிருக்க'' என்று.

''நான் அங்கு போகப்போவதாக யார் சொன்னது?'' என்று கேட்டாள் சித்தரஞ்சனி.

''யாரும் சொல்ல வேண்டாம். உன்னைத் தூக்கிப் போக இன்றிரவு முயற்சி நடக்கும். அந்த முயற்சியை முறியடிக்கவே உன்னைப் பாதுகாப்பான இடத்துக்கு அனுப்புகிறேன். நீ போ சீக்கிரம் நானும் வருகிறேன், சண்டிகா தேவி குகைக்கு'' என்று திட்டவட்டமாகக் கூறினான் சாதவாகனன். மேலும் தொடர்ந்தான், ''உன்னைத் தூக்கிப் போய் என்னைப் பிடிக்கும் தூண்டில் மீனாக உன்னை உபயோகப்படுத்துவார்கள்'' என்று.

அதற்குமேல் ஆலசியத்துக்கு இடங் கொடாத கௌதமிபுத்ரன் சேனாதிபதியுடன் சித்தரஞ்சனியை அனுப்பி வைத்தான். பிறகு தாபிலேசுவரர் கோவில் கதவை மூடிவிட்டுத் தனது புரவியில் ஏறி முகத்துவாரத்தை நோக்கிப் பயணம் செய்தான். முகத்துவாரத்துக்குச் சிறிது முன்பாகவே இருந்த ஒரு பெரிய பாறையின் அருகில் வந்ததும் புரவியைப் பாறை மறைவில் நிறுத்திவிட்டுத் தான் மட்டும் பக்கத்திலிருந்த மரமொன்றின் மீது ஏறி அக்கரையைக் கவனிக்கலானான்.

இரவு முற்றி வெண்மதியும் விண்ணில் வலம்வரத்துவங்கியும் எந்தவித நடவடிக்கையும் கோட்டைப் பகுதியில் இல்லாததைப் பார்த்த சாதவாகனன் மரத்திலிருந்து இறங்க முற்பட்ட சமயத்தில் கோட்டைப் பகுதியில் திடீரென நடமாட்டம் ஏற்பட்டதையும், படகுகள் சில சித்தப்படுத்தப்பட்டதையும் கவனித்ததும் அங்கேயே சிறிது நேரம் உட்கார்ந்து கவனிக்கலானான். சாக வீரர்களைத் தாங்கிய இரு படகுகள் கிளம்பியதையும், ஒரு படகில் காஷ்டானனும் இன்னொரு படகில் க்ஷத்ரபனும் இருந்ததையும் பார்த்து அடுத்து நடப்பதை எதிர்பார்த்திருந்தான்..

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. மலைப் பகுதியில் எங்கும் நிம்மதி குடி கொள்ளத் துவங்கியது. கோட்டையிலிருந்து வந்த படகுகளிலிருந்தவர்கள் இரண்டு பிரிவாகப் பிரிக்கப்பட்டதும் திட்டத்தை ஓரளவு புரிந்து கொண்ட சாதவாகனன் மரத்தின் மீதிருந்து இறங்கிப் புரவியில்ஏறிச் சண்டிகா தேவியின் குடிசையை நோக்கி விரைந்தான். அவன் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் மலையில் ஏறத் துவங்கிய காஷ்டானனும் க்ஷத்ரபனும் அரவம் ஏதும் செய்யாமலும் மிகுந்த எச்சரிக்கையுடனும் தங்கள் தங்கள் பணிகளை நிறைவேற்றப் பிரிந்து சென்றார்கள்.

மகாக்ஷத்ரபனை நாகபாணன் கட்டளைப் படி மலைக்காட்டில் தீ வைக்க, தீ பரவாத தனித்த ஓர் இடத்தைத் தேர்ந்தெடுக்கக் கால் ஜாமமானாலும், இடத்தை நிர்ணயித்தவுடன் காய்ந்த கிளையில் தீ வைக்கத் தனது வீரர்களை ஏவினான். பந்தம் கொளுத்தப்பட்டுத் தீயைப் பட்டுப் போன கிளையில் அந்த வீரன் வைத்த பிறகு தீ திகுதிகுவென அந்தப் பகுதியில் பரவலாயிற்று. தீ நன்றாகப் பிடித்தவுடன் அந்தப் பகுதியிலிருந்து தனது வீரர்களுடன் அகன்று சாதவாகனனை எதிர்பார்த்து நின்றிருந்தான் க்ஷத்ரபன். ஆனால் தீ நன்றாகப் பரவியும் சாதவாகனனோ மலைவாசிகளின் கூட்டமோ அந்தப் பக்கம் வராது போகவே பெரும் குழப்பத்திற்குள்ளானான். அந்தக் குழப்பத்தின் விளைவாக என்ன செய்வதென்று அறியாமல் தனது வீரர்களுடன் தாபிலேசுவரர் கோவிலை நோக்கிச் சென்



பையன் 1: ''வகுப்பில் வாத்தியார் பாடம் நடத்தும் போதெல்லாம் காதைத் தீட்டிக்குவேன்!''

பையன் 2: ''வாத்தியார் சொல்றதைக் கவனமாகக் கேட்கவா?''

பையன் 1: ''ஊஹூம்! எப்படா மணி அடிக்கும்னு!''

—உ. ராஜாஜி.

சும்மா சொல்லக் கூடாது, வருமான வரிக்காரங்க ரொம்ப கில்லாடிங்க தான்!''

''எதை வச்சு சொல்றீங்க?''

''நம்ம நிலை கொஞ்சம் உயர்ந்து நாம வசதியா வாழறோமெங்கிற விஷயத்தை நாம தெரிஞ்சிக்கிறதுக்கு முன்னாடியே அவங்க தெரிஞ்சிக்கிடறாங்க!



றான். அங்கிருந்து தாபிலேசுவரர் கோவிலை அடையக் கிட்டத்தட்ட நடுநிசியாகிவிட்டதால் கோவில் பகுதியில் நிசப்தம் நிரம்பிக் கிடந்தது. அதன் முன்பாக வீசிக் கிடந்த நிலவில்கூட ஒருவித பயங்கரமிருப்பதாக க்ஷத்ரபனுக்குத் தோன்றியதேயொழிய நிலவில் அழகிருப்பதாக அவனுக்குத் தெரியவில்லை. ஏதோ தன்னையும் மீறிப் பயங்கரம் உருவாகியிருப்பதாக நினைத்த க்ஷத்ரபன் ஒருமுறை கோவிலைச் சுற்றி வந்தான். அப்படியும் ஏதும் விளங்காது போகவே, "காஷ்டானன் என்ன ஆனான்? சித்ரஞ்சனியைச் சிறை செய்து கோட்டைக்குக் கொண்டு போய்விட்டானா?" என்று கேள்விகளை எழுப்பிக் கொண்டான். விடை ஏதும் கிடைக்காது போகவே தனது வீரர்களில் ஒருவனை அழைத்து, "கோவிலுக்குள் யாரிருப்பது பார்" என்று உத்தரவிட்டான்.

க்ஷத்ரபன் உத்தரவுப்படி வீரனும் கோவில் கதவைத் தட்டவே உள்ளிருந்து பதிலேதும் கிடைக்காததால் திரும்பி நோக்கினான் க்ஷத்ரபனை. க்ஷத்ரபன் அடுத்த உத்தரவு இடுவதற்குப் பதிலாகத் தானே படிகளில் ஏறிச் சென்று கதவில் தோளைக் கொடுத்துத் தள்ளினான். கதவு தாளிடாதிருந்ததால் திடீரென வேகத்துடன் திறக்கவே கோவிலின் முன் மண்டபத்தில் தடாலென விழுந்த க்ஷத்ரபன், மெள்ளச் சமாளித்து எழுந்த பிறகு அங்கு யாரும் இல்லாததைக் கண்டு ஏதும் புரியாததால், "இந்தச் சனியன் பிடித்த காஷ்டானன் எங்கே?" என்று கூவினான். அவன் கூவலைக் கோவில் சுவர்கள் எதிரொலி செய்தன பயங்கரமாக. அதனால் சற்று பீதியடைந்த க்ஷத்ரபன் மெள்ள கர்ப்பக்கிரகத்தை நோக்கிச் சென்றான். அங்கு இருந்த சிவலிங்கத்தின் ஆவுடையாரில் ஒரு பெரிய ஓலையிருந்தது. அதை எடுத்துக் கர்ப்பக்கிரக விளக்கில் படித்த க்ஷத்ரபன் ஏது செய்வதென்றறியாமல் திகைத்து நின்றுவிட்டான். ஓலையைப் பிடித்த கைகள் நடுங்கின. "அடப்பாவி! படு மோசம் செய்துவிட்டாயே" என்று துன்பத்துடன் கூவினான் க்ஷத்ரபன்.

காஷ்டானனும் அவனுடன் வந்த வீரர்களும் மாயமாய் மறைந்துவிட்டனர். அவர்கள் ஒருவேளை அழிக்கப்பட்டார்களா என்பது தெரியவில்லை க்ஷத்ரபனுக்கு. என்ன செய்வதென்று அறியாமல் ஓலையைக் கையில் ஏந்திய வண்ணம் கோவிலுக்கு வெளியே வந்தான். எங்கிருந்தோ பறந்து வந்த அம்பு ஒன்று அவன் காலடியில் விழுந்ததும், அதிலும் ஒரு ஓலை கட்டப்பட்டிருந்ததையும் கவனித்த க்ஷத்ரபன் சுயநிலையை அடியோடு இழந்தான். பிறகு சமாளித்துக் கொண்டு அந்த ஓலையை எடுத்தான் அம்பிலிருந்து. அதில் முத்திரை வைக்கப்பட்டிருந்தது. நாகபாணனுக்கு விலாசமிடப்பட்டிருந்தது. முத்திரைகளை உடைத்து அதையும் படித்தான். வெகு சீக்கிரம் விபரீதம் மூளக் கூடிய நிலை சூழ்ந்து வருவதை உணர்ந்து கொண்டான் க்ஷத்ரபன்.

(தொடரும்)




ஆசை அடங்க மாட்டேனென்றாலும் திரும்பத் திரும்ப அடக்கப் பார்த்துக் கொண்டேதானிருக்க வேண்டும். வைராக்யம் என்பதான ஆசையின்மையை, பற்றின்மையை ஸம்பாதித்துக் கொள்ள விடா முயற்சி பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும்.

ஏனென்றால், ஆசை என்ற இந்த ஒரே ஒரு சத்ருவை எப்படியோ ஒரு தினுஸில், எப்பாடு பட்டாவது நாம் ஒழித்துக் கட்டி விட்டால் போதும் — அப்புறம் நாம் ராஜா தான். ராஜா என்றால் இந்த உலகத்து ராஜா இல்லை. அவனுக்கு உள்ள ஆசையும் தொல்லையும் நமக்கு வேண்டவே வேண்டாம். நான் சொல்வது ஆசை, தொல்லைகிட்டேயே வராத சாச்வத சாந்தத்தை உடைய ராஜா.

பல நூறாயிரம் கெட்ட விருத்திகளை ஒவ்வொன்றாய் அடக்கப் பார்த்துப் பிரயோஜனமில்லை. அது முடியாத காரியம். ஆசையால் அவை கிளைகள் என்றால் அவற்றுக்கு வேராக உள்ள ஆசை என்ற ஒன்றை வெட்டி விட்டால் போதும். ஆனால் வெளியே நீண்டிருக்கும் கிளையை வெட்டுவதை விட உள்ளே புதைந்துள்ள வேரைத் தோண்டி அழிப்பது ரொம்பவும் கஷ்டம் தான். இருந்தாலும் இதைச் செய்யாவிட்டால் வெட்டிய கிளைகள் மறுபடி மறுபடி முளைத்துக் கொண்டுதானிருக்குமென்பதால் எப்படியாவது இதை ஸாதிக்கத்தான் வேண்டும்.

இப்படியே ஸகல கஷ்டத்துக்கும் ஸகல துர்வ்ருத்திகளுக்கும் வேராக உள்ள ஆசையை அழிக்காமல் அந்தக் கஷ்டம் ஒவ்வொன்றையும் நிவ்ருத்தி செய்து கொள்ளவும் பாடுபட்டால் அவ்வளவும் நிஷ்பலமாகத்தான் ஆகும். **Cause**–ஐ (காரணத்தை) அழிக்காமல் விடும்வரை **Effect**–ஐ (விளைவுகளை) நிரந்தரமாக அழிப்பது என்பது நடக்காத காரியம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# உங்களின் 'புதிய' செகண்ட்-ஹாண்ட் டு வீலர் 1988 இல் புன்னகை பூக்குமா ?



அது செகண்ட்-ஹாண்ட் ஸ்கூட்டராக இருக்கலாம்; ஆனால் உங்களுக்கோ புத்தம் புதியதைப் போன்றது. விலை மதிப்பற்ற பயன்தரும் பொக்கிஷம். ஏற்கனவே எத்தனை கிலோ மீட்டர் ஓடியிருந்தாலும் இன்னும் எத்தனையோ தூரம் ஓடவேண்டியிருக்கிறது. அதற்கு நீங்கள் போதிய பராமரிப்பு தர வேண்டும்.

உரிய நேரத்தில் உரிய முறையில் பராமரித்தால் உங்களுடைய டு வீலர் வாகனம் பின்னாளில் பணம் தின்னும் சுமையாக மாறாது.

**எனவே, நீங்கள் பயன்பெற சில குறிப்புகள்:**

**விசைக்கூடம் இஞ்சின் —அதை கோளாறு இன்றி வைத்திருங்கள்**

உங்களுடைய டு வீலர் வாகனத்தை முறையாக செக்-அப் செய்ய பெயர் பெற்ற கேரேஜுக்கு கொண்டு செல்லுங்கள். ஸ்பார்க் பிளக் இடைவெளி, இக்னிஷன் நேரம், தொடர்பு பாயின்ட்கள் ஆகியவற்றை சரி பாருங்கள். இந்த முன்னெச்சரிக்கைகளால் இஞ்சினில் பெரிய சேதம் ஏற்படாமல் பெருந்த செலவு மிச்சமாகும். அது மட்டுமல்ல எரிபொருள் சிக்கனமும் கிடைக்கிறது.

**ஏர் ஃபில்ட்டரை நன்கு சுத்தப்படுத்தவும்**

உங்கள் இஞ்சினின் ஏர் ஃபில்ட்டரில் தான் தூசு சேர்கிறது. அதை தூசு அடைத்து விட்டால் அதன் செயல் வேகம் குறைகிறது. எனவே அடிக்கடி அதை சுத்தம் செய்ய வேண்டும். ஸ்கூட்டர் அல்லது மோட்டார் சைக்கிள் குறிப்பிட்ட நாட்கள் ஓடிய பின்னர் அதை மாற்ற வேண்டும். தூசு சேர்ந்தால் சிலிண்டர் போர் சீக்கிரம் தேய்ந்து விடும்—இதை மறவாதீர்.

**டயரில் குறைவாகவோ கூடுதலாகவோ காற்று பிடிக்க வேண்டாம்**

டயரில் உள்ள காற்று அழுத்தத்தை கவனமாகப் பாருங்கள். கூடவோ குறையவோ இருந்தால் டயரின் ஆயுள் குறையும். உங்கள் எரிபொருள் செலவு 5% கூடும்.

**உங்கள் டு வீலர் வாகனத்தை பூப்போல பாவியுங்கள்**

கிளட்ச் மெதுவாகப் போடவும். தேவையின்றி அதைப் போட்டால் கிளட்ச் லைன் சேதமடைந்து சக்தி விரயமாகும்.

அதிகபட்சம் மணிக்கு 40-50 கி.மீ. வேகத்தில் ஓட்டவும். அதிக வேகம் ஆபத்தானது; பெட்ரோலும் நிறைய செலவாகும்.

நிறுத்தங்களையும் திருப்பங்களையும் எதிர்பார்த்து ஓட்டுவதால் திடீர் பிரேக் போடுவதைத் தவிர்க்கலாம். இதனால் பிரேக் லைனிங் தேய்வதில்லை; எரிபொருள் செலவும் கூடுதல் 5% மிச்சமாகிறது.

**உங்கள் டு வீலர் வாகனப் பராமரிப்புக்கு கிடைக்கும் போனஸ் தான் எரிபொருள் சேமிப்பு**

இவ்வகைக் குறிப்புகளைக் கவனமாகப் பின்பற்றினால் (மேலும் பல விபரங்களை உங்களுக்கு அனுப்புகிறோம்) உங்கள் ஸ்கூட்டர் அல்லது மோட்டார் சைக்கிள் மேலும் பல ஆண்டுகளுக்கு புத்தம் புதியது போல உழைப்பதை உணர்வீர்கள் உங்கள் எரிபொருள் செலவும் வெகுவாகக் குறையும்.

டு வீலர் வாகனப் பராமரிப்பு மற்றும் எரிபொருள் சேமிப்பு பற்றி அறிய ஆர்வமாய் உள்ளேன். உங்கள் இலவச புத்தகத்தை தயவு செய்து அனுப்புங்கள்.

பெயர் ____________________

முகவரி ____________________

____________________




Petroleum Conservation Research Association

பெட்ரோலியம் கன்சர்வேஷன் ரிசர்ச் அஸோஸியேஷன்,
808, "சேத்தி பவன்",
7, ராஜேந்திரா ப்ளேஸ்,
புதுதில்லி-110 008.



**டு வீலர் பராமரிப்பும் எரிபொருள் சேமிப்பும் இணைபிரியாதவை**

CLARION D 110 TAM

# இந்தக் கடிதம் ஒரு துருப்புச் சீட்டு!



அன்னம்

**அவர் மகிழ்ச்சி கட்டுக்கடங்காமல் போயிற்று.**

**வடிவேல் இனிமேல் தொலைந்தார். அவரை வீழ்த்த ஒரு பலமான துருப்புச் சீட்டுக் கிடைத்து விட்டது!**

அன்றையத்தபாலில் அந்தத் திருமணப் பத்திரிகையைப் பார்த்ததிலிருந்து கதிர்வேலு விற்கு இருப்புக் கொள்ளவில்லை. மனம் ஒரு நிலைப்பட மறுத்தது.

வியாபாரத்தில் போட்டி. நிலம் வாங்கப் போனால் போட்டி. வீடு கட்டப் போனால்

பேசட்டி. புடவைக் கடைக்குப் போனல் கூடப் போட்டி!

வேறு யாரும் இல்லே. அவர் கூடப் பிறந்த அண்ணன் வடிவேலுதான்!

இரு குடும்பங்களுக்கிடையே நெருங்கிய தொடர்பு அற்றுப் போய் பத்து வருஷங்கள் ஆகின்றன. பாகத்தைப் பிரித்துக் கொண்டு வந்தவர், முன் யோசனே இல்லாமல், வியாபாரத்தில் இறங்கி அநேகமாக எல்லாவற்றையும் கோட்டை விட்டுவிட்டார்.

ஆனல் வடிவேலுவின் ஜாதக பலனே— புத்திசாலித்தனமோ — செயல்திறனே பெரிதாக வளர்ந்து கொடிகட்டிப் பறக்கிருர். எந்த இடத்தில் கதிர்வேல் மீண்டும் கால் ஊன்ற நினைத்தாலும் வடிவேலின் பெயர் முன்னுல் இருக்கும். அவருடைய நாணயம், செல்வாக்கு — கதிர்வேல் நினைத்தது நடக்காமல் போய்விடும்.

சந்தர்ப்பங்கள்தான் அப்படி அமைந்தனவே தவிர, வடிவேல் வன்மம் ஏதும் வைத்துக் கொண்டு கதிர்வேலேப் பழி வாங்கவில்லே.

எல்லாவற்றிற்கும் மகுடம் வைத்தாற் போல்—இது நடந்துவிட்டது. கதிர்வேலின் மகள் கற்பகம் எல்லாவற்றிலும் சுமார்தான். அழகில், படிப்பில், சாமர்த்தியத்தில். அவள் ஜாதகம் ஓரிடத்தில் நன்ருகப் பொருந்தியிருந்தது. பையன் இன்ஜினியர். பெயர் மணி வண்ணன். அடுத்த வெள்ளிக்கிழமை பெண் பார்க்க வருவதாக ஏற்பாடு.

ஆனல் புதன்கிழமையே கதிர்வேலுவிற்குத் தாக்கல் கிடைத்துவிட்டது. அவர்கள் வேறு இடத்தில் கல்யாணம் நிச்சயித்துவிட்டார்களாம். அதுவும் யார்.....? வடிவேலின் மகள் பவானியை!

கதிர்வேலின் ஆத்திரத்திற்குக் கேட்கவா வேண்டும்? இன்றைக்குத் திருமணப் பத்திரிகை வேறு வந்துவிட்டது. அவர் கையில் மட்டும் ஒரு மந்திரக்கோல் கிடைத்திருந்தால் வடிவேலுவின் குடும்பத்தையே சுட்டுச் சாம்பலாக்கியிருப்பார்.

கதிர்வேலுவிற்கு ஒரு 'கடலேக் கடை' இருந்தது. பொட்டலம் கட்டுவதற்குப் பழைய புத்தகங்களே வழக்கமாக ஒருவர் — வீடு வீடாக வாங்கி விற்பவர் — கதிர்வேலு வீட்டில் கொண்டு போடுவார். கதிர்வேலுவின் குடும்பம் படித்து முடித்த பிறகு அவை கடைக்குப் போகும். அப்படி ஒரு புஸ்தகத்தைப் பிரித்தபோது, அதிலிருந்து 'இன்லண்ட் லெட்டர்' ஒன்று விழுந்தது.

அசிரத்தையாக எடுத்துப் பார்த்தவர் கண்களில் வெறி. அவசரம் அவசரமாகப் படித்தார்.

பின்புறம் அனுப்பியவரின் விலாசம்; அவர் மகிழ்ச்சி கட்டுக்கடங்காமல் போயிற்று. கடவுளாகப் பார்த்து அவர் மடியில் போட்ட பிச்சை. வடிவேல் இனிமேல் தொலேந்தார். அவரை வீழ்த்த ஒரு பலமான துருப்புச் சீட்டு கிடைத்துவிட்டது!

அவர் மகள் பவானி, 'கண்ணன்' என்ற பெயர் கொண்ட ஒருவனுக்கு எழுதிய கடிதம். நான்கு மாதங்களுக்கு முன் எழுதப்பட்டிருந்தது. இந்தக் கல்யாணம் அப்போது நிச்சயமாகவில்லே.

கண்ட கண்ட சினிமாவெல்லாம் பார்த்துவிட்டு எப்படிக் கொஞ்சமும் லஜ்ஜையில்லாமல் எழுதுகிருர்கள்.

கடிதத்தில் உள்ள விவரங்களேப் படித்தால் இந்தக் கண்ணனுக்கும் பவானிக்கும் ஒரு வருஷமாகத் தொடர்பு இருக்கும் போல் தெரிகிறது.

கதிர்வேலு ஒரு தீர்மானத்திற்கு வந்தார்.

கல்யாணத்திற்கு முதல் நாள் மணமகன் பெயருக்கு ஒரு 'பார்சல்' தயாராக இருந்தது. அதில் இருந்தது இந்த 'இன்லண்டு லெட்டர்.'

''தேடிப் பிடித்துத் தாலி கட்டினயே —



# கருமமே கண்!

பிரதமர் ராஜீவ் காந்தியின் செயலாளரிடமிருந்து அப்புகைப்பட நிபுணருக்கு போன் வந்தது, பிரதமர் தம் குடும்பத்தாரோடு புகைப்படம் எடுத்துக் கொள்ள விரும்புகிருர் என்று.

பிரதமர் குடும்பத்தைப் புகைப்படம் எடுப்பதால் தமக்குக் கிடைக்கவிருக்கும் புகழ், பணம் எல்லாவற்றையும்விட தொழில் கர்மத்தையே பெரிதாகக் கருதிய அப்புகைப்பட நிபுணர், அன்றைய தேதியில் வாடிக்கையாளர் ஒருவருக்குத் தாம் வருவதாக ஏற்கெனவே உறுதியளித்திருப்பதாகவும், எனவே தம்மால் அன்று வர முடியாது என்றும் சொல்லிவிட்டார்.

அப்புகைப்பட நிபுணர்: ஜீத்தேந்திர ஆர்யா.

— ஆதாரம்: ஈவ்ஸ் வீக்லி.

தகவல்: வி. ந. ஸ்ரீதரன்.

# N.S.K.
## பைனான்சியர்ஸ்

மற்றுமொரு பண்டிகைகால வெகுமதி பெறுங்கள்.

**அன்பளிப்பு** hmt கடிகாரம்

குறைந்த நாட்களே உள்ளன



வருடாந்திர வட்டி விகிதங்களின் மேல் 3%
கூடுதல் வட்டியுடன்

**Pays 24%**

வழக்கம்போல் உள்ள வட்டி
விகிதங்களுக்கு மேல் **3%**
கூடுதல் வட்டி

### பிக்ஸட் டெபாசிட்டுகள்

| 1 Year | 2 Years | 3 Years | 5 Years |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 21% |

ஒவ்வொரு ரூ. 5000/- (குறைந்தது 2 வருடங்கள்) டெபாசிட்டுக்கும்
அன்பளிப்பு — வெள்ளிப் பொருட்கள்
உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்களது கோல்டன் கேஷ்
சர்டிபிகேட் திட்டத்தின் மூலம் இரு மடங்காகிறது.

### வங்கி கேஷ் சர்டிபிகேட்கள்

| 5 Years | 6 Years | 7 Years | 10 Years |
|---|---|---|---|
| 18% | 19% | 20% | 24% |




**N.S.K. பைனான்சியர்ஸ்**

எண். 38B, பர்கிட் ரோடு (முதல் மாடியில்)
(தி.நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்) தி.நகர்,
சென்னை-600 017. போன் : 447135

எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.



# அடுப்படியில் அடியெடுத்து வைத்த போது...

## வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத் திட்டம்

**போட்டி: 35**

நீங்கள் ஆண்மகனானால் தொழில் ரீதியிலோ உதவி புரியவோ அல்லது ஒரு ஹாபியாகவோ கூடச் சமையல் செய்யப் புகுந்திருக்கலாம். டீயன் காப்பி தயாரிக்கும் சந்தர்ப்பமாவது இருந்திருக்கும். பெண்மணியானால் உங்கள் தாயார் உங்களை அடுப்படியில் இழுத்து வந்து நிறுத்தியிருப்பார். எவ்வாறாயினும் அடுப்படியில் அந்த முதல் அனுபவம் எப்படி இருந்தது? (கருத்து: க. ராணி, நாகர்கோயில்) கீழே வெற்றிடத்தில் அந்த வேடிக்கையைச் சுருக்கமாக எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மீது "அடுப்படி அனுபவம்" என்று குறிப்பிடவும். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் வி. ஐ. பி. ஸூட்கேஸ்.

**முடிவு தேதி: 13.1.86**

**இன்னும் 18 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள்தான் பாக்கி! அவற்றில் ஒன்றைப் பெற முழு முயற்சி மேற்கொள்ளுங்கள், வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுவதின் மூலம்.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

உன் மனைவி. அவள் யோக்யதையைப் புரிந்து கொள்!" — என ஒரு வாசகம் — கையெழுத்து போடப்படாமல்.

கதிர்வேலுதிருமணவீட்டிற்குக்கல்யாணத்திற்கு முதல் நாளே போய்விட்டார். அண்ணன்-அண்ணி வரவேற்றார்கள். மனத்தில் உள்ள வன்மத்தை மறந்து சகஜமாகப் பழகினர். பவானியைக் கேலி செய்தார்.

முகூர்த்தத்தின் போது தாலி கட்டுவதை விட அவர் தபால்காரர் வரவைத்தான் எதிர்பார்த்தார். கல்யாணம் முடிந்தவுடன்தான் வரவேண்டும் என்று தன் குல தெய்வத்தை வேண்டினர்.

தாலி முடிந்த பிறகு — மணமக்களுக்கு எல்லோரும் மொய் எழுதிய சமயம் — சித்தப்பா கதிர்வேல் கூடத் தாராளமாகவே செய்தார். தபால்காரர் வந்தார். அந்தப் பார்சலைக் கொடுத்து மணமகனிடம் கையெழுத்து வாங்கினர்.

அந்தப் பார்சலை அவன் பிரிக்கவே இல்லை.

எப்போதோ எரிமலை வெடிக்கப் போகிறது என எதிர்பார்த்த கதிர்வேலுவிற்கு ஏமாற்றம்தான் கிட்டியது. எல்லாமே சுபமாக முடிந்து மணமக்கள் தேனிலாவிற்கும் புறப்பட்டுப் போய்விட்டனர்.

என்ன நடந்தது என்று தெரியாமல் தலையைப் பிய்த்துக் கொண்டார் கதிர்வேலு.

**அ**ன்று காலை சாப்பாடு முடிந்தவுடன் எல்லா பரிசுப் பார்சல்களையெல்லாம் பிரிக்க ஆரம்பித்தார்கள். கதிர்வேல் அனுப்பிய பார்சலை மணிவண்ணன் — மாப்பிள்ளையே எடுத்தான். அதில் இருந்த கடிதத்தை மேலோட்டமாகப் பார்த்தவன், அவசரம் அவசரமாகத் தன் பையில் பத்திரப்படுத்திக் கொண்டான். உள்ளே கதிர்வேலு வைத்திருந்த கடிதத் துண்டு பார்சலைச் சுற்றியிருந்த காகிதத்துடன் தங்கிக் குப்பைக் கூடைக்குப் போய்விட்டது.

காரணம் — அந்தக் கடிதம் பவானி வேறு யாருக்கும் எழுதியது இல்லை. மணிவண்ணனுக்குத்தான்! வீட்டில் அவன் செல்லப் பெயர் கண்ணன். பவானி எழுதிய கடிதம் கைதவறிப்போய் அவன் தேடிக் கொண்டிருந்த சமயம்தான் கதிர்வேலு சம்பந்தம் பேச வந்திருந்தார். இனியும் தாமதித்தால் தவறு என எண்ணிய கண்ணன் தன் பெற்றோரிடம் விருப்பத்தைத் தெரிவிக்க — பவானியுடன் கல்யாணம் நிச்சயமாகிவிட்டது.

தனியாகப் பவானியிடம் அந்தக் கடிதத்தைக் காட்டியபோது, யாரிடம் அது சிக்கி, எப்படி ஏன் கல்யாணத்திற்குச் சரியான சமயத்திற்கு அனுப்பி வைத்தார்கள் என்று புரியாமல் யோசித்து யோசித்து அலுத்துப் போனார்கள்.

கடிதம் அனுப்பியவரோ, தான் வைத்த வெடி எப்படிப் புஸ்வாணமாகப் போயிற்று என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார்!

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி
# கன்காரு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்காரு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச க்ரீம் (செவ்வின மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,**
**வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

22. இலக்கிய நபும்சகர்கள்!

சந்திரசூடனும், குமாரும் சிட்டி கிளப்புக்குச் சென்றபோது உள்ளே பெரிய அறை ஒன்றில் சீட்டாட்டம் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. நான்கு மேஜைகளில் மேஜைக்கு ஏழு பேர்களாக அமர்ந்தவாறு சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். ஆடுபவர்களும் வேடிக்கை பார்ப்பவர்களுமாக அந்த அறை நிறைந்து வழிந்தது.

அறையின் மூலையில் கிடந்த ஒரு மேஜை மீது பேராசிரியர் கோபால் சம்மணம் போட்டு அமர்ந்து ஏதோ உரக்கப் பேசிக் கொண்டிருந்தார்., அவரைச் சுற்றிச் சிலர் நின்று சிரித்துக் கொண்டிருந்தார்கள். சந்திரசூடனும், குமாரும் சற்று ஒதுங்கி நின்றவாறு கவனித்தனர்.

கோபால், ஆபாசமான கெட்ட வார்த்தைகளையும், காமச்சுவை ஜோக்குகளையும் அள்ளி வீசிக் கொண்டிருந்தார்.

சந்திரசூடன் முகத்தைச் சுளித்தார். ''ஒரு பேராசிரியரின் வாயிலிருந்து வருகிற வார்த்தைகளைப் பார்,'' என்றார்.

''மேலோட்டமாகத்தான் அவர் பேராசிரியர். உள்ளுக்குள் உண்மையில் அவர் எவ்வளவு மட்டமானவர் என்பது வெளியாகிக் கொண்டிருக்கிறது,'' என்றார் குமார்.

அப்போது கோபால் இவர்களைப் பார்த்து விடவே, ''ஓஹோஹோ... எழுத்தாளரா? வாருமய்யா இலக்கியச் சிற்பியே,'' என்று நாடக பாணியில் வசனம் பேசியவாறே மேஜையிலிருந்து எழுந்திருக்க முயன்றார். தள்ளாடினார். சந்திரசூடன், ''கோபால் சார், எழுந்திருக்க வேண்டாம். அங்கேயே இருங்கள்,'' என்றார்.

கோபால் தள்ளாடியபடியே வந்தார். அவர்களை நெருங்கியதும், குமாரைப் பார்த்து, ஓஹோவென்று உரக்கச் சிரித்தார். பிறகு, ''நன்னடத்தை ஆபீஸரா? ஒரு பிரயோஜனமும் இல்லை. இங்கே பாருங்கள். இத்தனை பேரும் சூதாடிக் கொண்டிருக்கிறார்கள். உங்களால் திருத்த முடியுமா? உங்கள் இலாகா அனுவசியம். இதோ இத்தனை பேரும் குடிகாரர்கள், சூதாடிகள். ஜெயிலில் இருக்க வேண்டியவர்கள்,'' என்று அங்கிருந்த அனைவரையும் சுட்டிக் காட்டினார். எல்லாரும் சிரித்தனர்.

சந்திரசூடனுக்கு அவரைப் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. என்ன விளையாடுகிறோம் என்ற உணர்வே இல்லாமல் போதையில் தப்பும் தவறுமாக அவர் சீட்டாடுவதைக் கண்டு கழிவிரக்கம் தோன்றியது. கோபாலுக்கு முன் மேஜை மீது சூதாட்டப் பணமாக இரண்டே இரண்டு 'சிப்'கள் மட்டுமிருந்தன. அநேகமாகக் கையிலிருந்த பணம் முழுவதையும் இழந்து விட்டார்.

''கோபால் சார், இன்றைக்கு ஆடினது போதும். எழுந்திருங்கள்,'' என்றார் சந்திரசூடன்.

விளையாடிக் கொண்டிருந்தவர்களில் ஒருவர் கோபமாக, ''ஆடுகிறவரை ஏன் சார் கெடுக்கிறீர்கள், நீங்கள் பேசாமல் போங்கள்,'' என்றார்.

''கோபாலை நினைத்தால் சங்கடமாயிருக்

# உணர்வுகள் உறங்குவதில்லை



ர. சு. நல்லபெருமாள்

கிறது. சுய அறிவோடு இருக்கும்போது எவ்வளவு நாகரிகமாக, அறிவாளியாக இருக்கிறார். இங்கே வந்து தண்ணியைப் போட்டதும் பைத்தியக்காரனாக ஆகிவிடுகிறாரே!'' என்றார் சந்திரசூடன்.

அன்று இரவு வீடு திரும்பிய போது சந்திரசூடனின் மனம் மிகவும் குழம்பியிருந்தது. வீட்டு வளவிற்குள் ராதா அவளுடைய வீட்டு நடையில் அமர்ந்திருந்ததைப் பார்த்ததும் அவருடைய மனம் இன்னும் வாடியது. சிட்டி கிளப்பில் கோபால் சீட்டாடிக் கொண்டிருக்கும் காட்சி மனத்தில் விரிந்தது.

''ஏது நெற்றியில் விபூதி எல்லாம்? சைவப் பழமாக இருக்கிறாயே?'' என்றார்.

''கோயிலுக்குப் போயிருந்தேன். அவருக்கு ஒரு அர்ச்சனை செய்து வைத்துவிட்டு வந்தேன். பிரசாதம் கொடுத்து விடுகிறேன்,'' என்றாள் ராதா.

''பரணியிடம்கொடுத்து அனுப்பு,'' என்று கூறியபடியே மாடிக்குச் சென்றார்.

வெற்றிலைச் செல்லத்தை எடுத்துச் சாவதானமாக வெற்றிலையைப் போட்டுக் கொண்டு, அந்த சுகத்தை ரசித்தவாறே சாய்வு நாற்காலியில் கிடந்தார். எதிரே இருந்த மேஜை மீது இந்திராணியின் டைரிகள் கிடந்தன. அவருடைய பார்வை அவற்றின் மீது பட்டதும் அவற்றைப் படித்து விட்டு அவளுடைய வரலாற்றை விரைவில் எழுதி முடித்துவிட வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.

அந்த டைரிகளைப் பெறச் சங்கடப்பட வேண்டியிருக்குமோ என்று முதலில் நினைத்தார். ஆனால் இந்திராணியின் தாயார், அவர் போய்க் கேட்டதுமே கொடுக்கச் சம்மதித்தாள். ''தம்பி, இவளைப் பற்றி உனக்குத்தான் நன்றாகத் தெரியும். அவளுக்கும் உன் மீது அபிமானம் உண்டு. நீ எழுதப் போகிறாய் என்று பேப்பரில் விளம்பரம் பார்த்தேன். ரொம்ப சந்தோஷமாயிருக்கிறது,'' என்றாள்.

சந்திரசூடனுக்குப் பழைய கால நினைவுகள் மனத்தில் குமைந்தன — ரெங்கபுரம் கிராமத்தில் பிறந்த பட்டு என்ற ஏழைப்



பெண்ணைப் பற்றிய நினைவில் மூழ்கியிருந்தார்.

கண்களை மூடிச் சிந்தனையில் மூழ்கியிருந்த சந்திரசூடன், வாசலில் காலடியோசை கேட்டுத் திரும்பினார். பரணி உள்ளே வந்தான். ராதா கொடுத்தனுப்பியிருந்த கோயில் பிரசாதங்களை அவரிடம் நீட்டினான். விபூதியை எடுத்து நெற்றியில் இட்டுக் கொண்டார்.

''மத்தியானம் உன்னைத் தேடிக் கல்லூரிக்கு வந்தேன். காணவில்லையே?'' என்று கேட்டார்.

''இண்டர்வியூவிற்குப் போயிருந்தேன். முன்பே உங்களிடம் சொல்லியிருந்தேனே.''

''ஓ... பாஸ்டன் யுனிவர்சிடியிலிருந்து நடத்துகிறார்களே அதுவா? என்னாயிற்று?''

''எங்களுடைய ரீஜனில் என்னைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள், நான் போகப் போகிறதில்லை.''

''அடப்பாவி, ஏன்? இந்த வாய்ப்பு இலகுவில் கிட்டாது. ஏன் போகவில்லை?''

''எங்கள் குழுவிற்குப் பெண்கள் கல்லூரி ஆசிரியை தலைமை தாங்கி அழைத்துச் செல்கிறாள். எங்கள் குழுவில் நான்கைந்து மாணவிகளும் வருகிறார்கள்.''

''அதனால் என்ன?''

''எனக்குப் போகப் பிடிக்கவில்லை. ஆண்களுடைய கூட்டத்தோடு பெண்களும் கலந்தால் உற்சாகமாயிராது.''

''இப்போது உங்கள் கூட்டத்தோடு பெண்களும் வருவதால் உனக்கு ஒரு ஆபத்தும் வந்துவிடப் போவதில்லை. அமெரிக்காவைப் பார்க்கும் வாய்ப்பை இழக்காதே.''

''நான் போகப் போகிறதில்லை. ஆண்கள் கூடியிருக்கும் இடத்தில் பெண் வாடை வீசினால் ஆண்களுக்கான சூழ்நிலையே டல்லாகி விடும். பயணத்தில் எங்களுக்கு உற்சாகம் இல்லாமல் போய்விடும்,'' என்றான் பரணி.

அவனுடைய எரிச்சல் கோபம் எல்லாம் சந்திரசூடனுக்குப் புரிந்தது.

**அ**ன்று ஞாயிற்றுக்கிழமை. ஆகவே, சோம்பலை நீக்க மனமில்லாமல் படுக்கையிலேயே கிடந்தார். வெற்றிலை போடும் ஆசையினால் அருகில் ஸ்டூலில் இருந்த வெற்றிலைச் செல்லத்தை எடுத்தார். உள்ளே வெற்றிலை இல்லை. தாமே கீழிறங்கி நாயுடு கடையில் வாங்கி வந்துவிடலாம் என்று எண்ணிக் கீழே சென்றார்.

முற்றத்தில் பார்வதியின் வீட்டு வாசலை நெருங்கிய போது, வீட்டினுள் பார்த்தார். உள்ளே ஒரு சோபாவில் சாய்ந்தபடி பார்வதி ஒர் புத்தகத்தில் மூழ்கியிருந்தாள். தரையில் ஒரு பொம்மையுடன் விளையாடிக் கொண்டிருந்த குழந்தை சாரதா, வாசலில் சந்திரசூடனைக் கண்டதும் பொம்மையைப் போட்டு விட்டு அவரிடம் ஓடிவந்தாள். குழந்தையைத் தூக்கியபடியே, ''இவளைக் கடைக்கு அழைத்துப் போகிறேன்,'' என்றார்.

''கடைக்குப் போனால் எதையாவது கேட்பாள்,'' என்றாள் பார்வதி.

''அதற்காகத்தானே கூட்டிக் கொண்டு போகிறேன்,'' என்றவாறே குழந்தையைத் தூக்கிக் கொண்டு வெளியே சென்றார்.

சற்றுநேரத்தில்வீட்டிற்குத்திரும்பியபோது குழந்தையின் கையில் சாக்லேட் பொட்டலம் இருந்தது. ''ஐயோ, எவ்வளவு! அத்தனையும் இவள் சாப்பிட முடியுமா?'' என்றாள் பார்வதி.

''நீயும் சேர்ந்து சாப்பிடேன்,'' என்றவாறே குழந்தையைக் கீழே இறக்கி விட்டார். பார்வதியின் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்ததும், ''என்ன புத்தகம்?'' என்று கேட்டார்.

''மேடம் பொவாரி. உட்காருங்களேன்,'' என்றாள் பார்வதி.

''ஓ... இதை முதலில் பிரான்ஸ் நாட்டில் தடை செய்திருந்தார்கள்,'' என்றார். அருகிலிருந்த சோபாவில் அமர்ந்தார்.

''ஏன்?''

''ஒரு மனைவி வழிதவறி நடப்பதாக நாவல் உள்ளது.''

''கணவன் வழிதவறி நடப்பதைப் பற்றிய நாவல்கள் மட்டும் வெளிவரலாம் போலிருக்கிறது,'' என்று சிரித்தாள்.

இதைக் கேட்டுச் சந்திரசூடன் துணுக்குற்றார். ''அது அந்த நாளைய மதிப்பீடு. அதன்படி தடை விதித்தார்கள். இன்று அப்படி தடை இல்லை.''

பார்வதி சொன்னாள்: ''இந்த நாவலில் வரும் எம்மாவைப் போல், எத்தனையோ பெண்கள் சமுதாயத்தில் இருக்கத்தானே செய்கிறார்கள். நீங்கள் ஒரு எழுத்தாளர். எத்தனையோ பிரச்னைகளை அலசி எழுதுகிறீர்கள். ஆனால் உங்கள் நாவல்களில், இந்த நாவலில் வரும் எம்மாவைப் போன்ற ஒருத்தியைக் கதாநாயகியாக்கத் துணியவில்லையே,''

சந்திரசூடனுக்குப் பொட்டில் அடிபட்டது போலிருந்தது. திகைப்புடன் அவளைப் பார்த்தார்.

அவள் தொடர்ந்து சொன்னாள்: ''இந்த மாதிரிக் கருத்தை மேல்நாட்டவர்கள் எடுத்துக் கொண்டு இலக்கியமாக்கியிருக்கிறார்கள்.''

''நம்முடைய இலக்கியங்களிலும் இல்லையா? அகலிகை கதை இருக்கிறது. தாரையின் கதை இருக்கிறது,'' என்றார் சந்திர

''என்னமா அது. புது கர்ச்சீப் வாங்கினியா?''

''இல்லை. நீங்க 75% தள்ளுபடியில வாங்கி வந்த புடவையைத் தோய்ச்சதும் இப்படி ஆயிடிச்சு!''



சூடன்.

''அதையெப்படிக் கையாண்டிருக்கிறீர்கள்? இந்த நாவலைப் படிக்கும்போது எம்மா மீது நமக்கு ஏற்படும் பரிவும், இரக்கமும் அகலிகை மீது ஏற்படும் படியாக எழுதவில்லையே.''

''நம் நாட்டுப் பண்பாடு வேறு.''

''ஓ...! வெளிநாட்டுப் பண்பாடு, எல்லா மனைவிமாரும் கெட்டு அழியட்டும் என்கிறதோ? கற்பு என்பது இந்த நாட்டிற்கே சொந்தம்போலவும்; மற்றநாட்டாரெல்லாம், தங்கள் மனைவிமார்களை மாற்றானுக்குக் கொடுத்து விடுவது போலவும் ஓர் எண்ணம். இந்த நாவலில் எம்மாவைப் பற்றிப் படிக்கும் போது அவளை நினைத்துக் கண்ணீர் வந்துவிடுகிறதே. ஏன் நம்நாட்டு எழுத்தாளர்களுக்கு இதுபோல் எழுதத் தெரியவில்லை தெரியுமா?'' என்று கேட்டாள் பார்வதி.

''ஏன்?''

''மனித உணர்வுகளை எழுத முயலும் எழுத்தாளர்கள், பெண்களின் உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுப்பதில்லை. கோவலனைப் புகழ்வார்கள். அர்ஜுனன் போன்றவர்களைத் தலைமீது தூக்கி வைப்பார்கள். இந்திரனைத் தெய்வமாக்குவார்கள். ஆனால் அகலிகைக்காக இரங்கி ஒருவார்த்தை எழுதத் தெரியாது.''

''எழுதத்தெரியாமல் என்ன? பெண்ணைப் பற்றி எழுதினால் விரசம் தோன்றும்.''

''ஓஹோ, கற்பிழந்த ஆணைப்பற்றி எழுதும் போது விரசம் இல்லையோ? பெண்ணைப் பற்றி எழுதும் போது மட்டும் விரசமோ?'' என்று கேட்டாள். அவளுடைய குரலில் கோபம் தொனித்தது. தொடர்ந்து சொன்னாள்: ''கற்பு என்பதே ஆண்களுடைய ஆதிக்கச் சதியினால் வகுக்கப்பட்டதுதான். கற்பு கடவுளுக்குச் சமம்; கற்புள்ள பெண் நினைத்தால் மழைகூடப் பெய்யும் என்றெல்லாம் கதை கட்டி, கற்புநிலையைப் பெண்கள் மீது திணித்தார்கள். ஏன் இந்தக் கதைகளை ஆணுடைய கற்பிற்கும் சொல்லவில்லை? பெண் கற்புக்காகத்தான் எத்தனை கதைகள்? புராணங்கள்! இதிகாசங்கள்!''

''மேலைநாட்டிலும் பெண்கள் வழிதவறி நடப்பதைச் சரியென்று எழுதவில்லையே,'' என்றார் சந்திரசூடன்.

''ஒப்புக்கொண்டு எழுத வேண்டும் என்று நான் சொல்லவில்லை. அதற்கான காரணத்தைச் சிந்தித்துப் பெண்ணின் உணர்வுகளைப் பரிவோடு புரிந்துகொள்ளவுமா கூடாது?''

பார்வதியின் பேச்சு சந்திரசூடனைச் சுற்றிச் சூழ்ந்தன. அவருடைய சிந்தனையின் அஸ்திவாரத்தையே கலக்கியது.

''எம்மாவையோ, அன்னாகரினாவையோ, சாட்டர்லி சீமாட்டியையோ போன்ற நெஞ்சை நெகிழ வைக்கும் கதாபாத்திரம் ஒன்றாவது நம்முடைய இலக்கியங்களில் இருக்கிறதா?'' என்று பார்வதி கேட்டாள்.

சந்திரசூடன் சிந்தனையில் நெற்றியைச் சுளித்தார்.

''நான் துரோகம் செய்யும் மனைவிகளுக்காக வக்காலத்து வாங்குகிறேன் என்று எண்ணி விடாதீர்கள்,'' என்று கூறிப் பார்வதி சிரித்தாள். பிறகு சொன்னாள்: ''பொதுவாக எந்தப் பெண்ணும் கெட்டுப் போக வேண்டும் என்று எண்ணவே மாட்டாள். அது ஒரு அருவருப்பான காரியந்தான். ஆனால் ஏதோ ஒரு வலுவுள்ள நியாயமான காரணம் தூண்டிவிடலாம். அதைப் புரிந்து கொண்டு எழுதலாமே.''

''இந்தசெக்ஸ்விஷயம்தவிர எழுதுவதற்கு வேறு எத்தனையோ விஷயங்கள் உண்டு,'' என்றார் சந்திரசூடன் அலட்சியமாக.

''பெண் விஷயம் என்றால், வெறும் செக்ஸ்தான் என்று நினைத்துவிட்டீர்களா? உண்மையில் பெண்களைப் பொறுத்தவரை செக்ஸ், கடைசி பட்சந்தான். ஓர் உள்ளார்ந்த தொடர்பு, அன்பு, அரவணைப்பு இவைகள்தாம் ஒருத்திக்கு முக்கியம். பெண்ணைப் பற்றிய இந்த அடிப்படை உண்மையைக் கூடப் புரிந்துகொள்ளாமல் எழுதுபவர்கள், இதுபற்றிய இலக்கியத்தை எங்கே படைக்க முடியும்?'' என்றாள் பார்வதி படபடப்புடன்.

சந்திரசூடன் அதிர்ந்துவிட்டார். அவள் குரலில் தொனித்த கோபம் அவரை உலுக்கி விட்டது. தன்னையே அவள் நேரடியாகத் தாக்கி விட்டாள் என்ற திகைப்பில் அவளைப் பார்த்தார்.

''நான் அந்தக் கண்ணோட்டத்துடன் சொல்லவில்லை. இதுபற்றி எழுதினால் அச்சிடப் பயப்படுவார்கள்,'' என்றார்.

''அப்படிப் பயந்து சாகும் முதுகெலும்பு இல்லாத பதிப்பாளர்களுக்கு நீங்கள் எழுதுவானேன்? உங்களுடைய நிழல் பத்திரிகையைத் தொடங்குங்கள். சுதந்திரமாக இலக்கியங்களைப் படையுங்கள்.''

''நிழலை ஆரம்பிக்கப் பணம் வேண்டுமே.''

''அதற்குத்தான் இந்திராணியின் கதையை எழுதுகிறீர்களே, பணம் கிடைத்துவிடும்.''

''பணம் கைக்கு வரட்டும். பிறகு பார்ப்போம்,'' என்றவாறு எழுந்தார் சந்திரசூடன்.

''நான் உங்களிடம் படபடப்பாகப் பேசி விட்டேன்,'' என்றபடி பார்வதியும் எழுந்தாள்.

''உன் கருத்தைச் சொன்னாய்,'' என்று சிரித்தார்.

''உங்கள் கருத்து என்ன?''

''உன்னுடைய கருத்துத்தான்.''

இதைக்கேட்டுப் பார்வதியின் முகம் மலர்ந்தது. ''சண்டை போடுவதுபோல் பேசிவிட்டேன்,'' என்று கூறிச் சிரித்தாள்.

''சண்டை போடுவதும் உரிமைதான்,'' என்று சிரித்துக் கொண்டே வெளியே வந்தார் சந்திரசூடன்.

(தொடரும்)

தூக்கம் வந்துவிட்டால் தலையணை தேவையில்லை: காதல் வந்துவிட்டால் அழகு தேவையில்லை!

— ஆப்கானிஸ்தான்

— ஆங்கரை ஆனந்



வாசகர் பங்கு

## குடும்பத்தைக் காத்த கஜேந்திரன்

மன்னார்குடி ராஜகோபாலசுவாமி கோயில்யானையைத்தான் நான் என் செல்லப் பிராணியாக ஏற்றுக் கொண்டிருக்கிறேன்.

ஒரு முறை யானைப் பாகனின் மனைவி கோயில்கிணற்றில் தண்ணீர் எடுக்கப்போய், தவறி உள்ளே விழுந்துவிட்டாள். அவளைக் காப்பாற்றச் சென்ற பாகனும் பாசியில் வழுக்கிக் கிணற்றினுள் விழ, அவர்களுடைய குழந்தை கிணற்றுக்கு அருகே சென்றுவிட்டது. யானை துதிக்கையால் குழந்தையை அப்புறப்படுத்தி, பலமுறை பிளிறி ஊரைக் கூட்டி, பாகனையும் அவன் குடும்பத்தையும் காப்பாற்றிவிட்டது.

— வெ. இரவிந்திரன், மன்னார்குடி.

## என் முதல் குழந்தை

திருமணமாகி முதல் இரவு அன்று என் கணவர் தனக்கு ஒரு மகன் இருப்பதாகச் சொன்னதும் அதிர்ந்து போனேன். பிறகு தான் புரிந்தது அந்தச் செல்ல மகன் ஜூலி— அவர் ஆசையாக வளர்த்த நாய் என்பது. எனக்கோ நாய்களைக் கண்டாலே ஆகாது. ஆனால் ஜூலி தினமும் காலையில் என் கணவருக்கு டூத் பேஸ்ட் எடுத்துத் தருவது முதல் பேப்பர் கொண்டு தருவதுவரை பல உதவிகளைச் செய்வதைப் பார்த்தேன். மனிதர்களை விட ஜூலி புத்திசாலி என்று தோன்றியது. என் மகன் கார்த்திக் பிறந்ததும், அவனைப் பார்த்துக் கொள்ளும் பணியையும் அழகாகச் செய்தது ஜூலி. குழந்தை அழுதால் இளிப் பொம்மையை எடுத்து விளையாட்டுக் காட்டும். கார்த்திக்கின் அழுகை மாயமாக நின்றுவிடும். இன்று கார்த்திக்கின் அக்காவாக ஜூலியை நேசிக்கிறேன்.

— ராதா வைத்யநாதன், கடலூர்—1.

## வாலி இல்லையேல் ஜாலி இல்லை!

எங்கள் ஊர் மலைப் பிரதேசமாகையால் வானர சேனைகளுக்குப் பஞ்சமில்லை. ஒரு நாள் எங்கள் தோட்டத்தில் அடிபட்டுக் கிடந்தகுரங்குஒன்றுக்குச்சிகிச்சை அளித்துக் காப்பாற்றினார் என் கணவர். அன்று முதல் எங்களுடன் ஒட்டிக் கொண்டு எங்கள் செல்லப் பிராணியாகிவிட்டது அந்தக் குரங்கு. அதற்கு வாலி என்று பெயரிட்டோம். இப்போது நான் வற்றல் வடாம் போட்டால் வாலி கம்பீரமாய்க் காவல் காக்கிறது! கடைக்குச் சென்றால், நேசத்துடன் துணைக்கு வருகிறது. எங்கள் இல்லத்தில் வாலி இல்லையேல் ஜாலி இல்லை!

— குமுதா ராகவன், பல்லக்கச்சேரி கிராமம்.

## உயிரைக் காத்த மீனு

'மீனு' என்னும் என் செல்லப் பூனைக் குட்டியை, தினமும் என் கால்மாட்டில் ஒரு

# செல்லப் பிராணி

* திரும்பி வந்த பாமி.



* காத்து நிற்கும் கோயில் காளை.

போர்வையைப் போட்டு அதில் படுக்க வைத்துவிட்டுத் தூங்குவேன். ஓர் இரவு மீனு என் காலைப் பிறுண்டி, 'மியாவ்' என்று சத்தி ரகளை செய்துவிட்டது. காரணம் புரியாமல் நான் விசிறியால் மீனுவை அடித்துவிட்டேன். ஆனால் மீனு விடாமல் கத்திப் பிறுண்டி, என் புடவையைப் பிடித்து இழுத்தது. எழுந்து விளக்கைப் போட்டேன். என்ன பயங்கரம்! என் படுக்கையில் இரண்டடி நீளமுள்ள நல்ல பாம்பு படமெடுத்துக் கொண்டிருந்தது! அன்று என் உயிரைக் காத்தது மீனு தான்.

— ஜி. கௌசல்யா, தஞ்சாவூர்.

## மோதியின் தாய்ப் பாசம்

நாகார்ஜுண சாகர் அணைக்கட்டுத் திட்டப் பகுதி ஒன்றில் முகாமிட்டிருந்தோம். அங்கு இருந்த 'மோதி' என்ற நாய் எல்லோர் மனத்தையும் கவர்ந்தது. அறிவுள்ள பிராணி. அதன் குட்டி ஒன்று லாரியில் சிக்கி இறந்த போது மோதி அந்தக் குட்டியின் உடலைக் கவ்விக் கொண்டு இருநூறு கி.மீ. தொலைவில் இருந்த மூசி ஆற்றின் கரைக்குக் கொண்டு போய்க் குழி தோண்டிப் புதைத்தது. மூன்று நாட்களுக்கு அந்த இடத்தை விட்டு நகராமல் மோதி துக்கம் காத்தது. இச்செயல் எங்களைக் கண் கலங்கச் செய்தது.

— எஸ்.கே. சுப்பிரமணியன்,
திருநெல்வேலி சந்திப்பு.

## பலநாள் திருடன் பிடிபட்டான்!

எங்கள் வீட்டு எருமையை எங்களைத் தவிர வேறு யாரும் நெருங்க முடியாது. ஒரு நடு நிசியில் அது ஊரே கிடுகிடுக்கும்படி 'அம்மா' என்று குரல் கொடுத்தபோது, நாங்கள் காரணம் புரியாமல் அலறிப் புடைத்துக் கொண்டு போய்ப் பார்த்தோம். மாட்டுக் கொட்டிலின் தரையில் மரண பயத்துடன் மல்லாந்து ஒருவன் படுத்துக் கிடந்தான். அவனை நகரவிடாமல் தடுத்து நின்றது எருமை. அக்கம்பக்கத்தில் பல மாடுகளைத் திருடியவன் அவன் என்பதை விசாரித்து அறிந்தோம். எங்கள் எருமையின் அறிவை நினைத்து மகிழ்ந்தோம்.

— என்.எஸ். இராமச்சந்திரன்,
சென்னை — 33.

## இன்னா செய்தார்க்கும் நன்மை

நாங்கள் பம்பாயில் வசித்தபோது எங்கள் பக்கத்து ஃபிளாட்டில் இருந்த நாய் சதா எங்கள் வீட்டு வாசல்படியிலேயே படுத்துக் கொண்டிருக்கும். இது துளியும் பிடிக்காமல் நாங்கள் அந்த நாயின் மேல் தண்ணீரும், பிஞையிலும் கொட்டி விரட்டி அடிப்போம். அந்தக் கொடுமைகளையெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளாமல் அந்தப் பிராணி எங்களுக்கு ஒரு பேருதவி செய்தது: ஓர் இரவு 10.30 மணி அளவில் என் மகளும் நானும் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது, பத்து, பதினைந்து தெரு நாய்கள் எங்களைச் சூழ்ந்து கொண்டு குரைக்க ஆரம்பித்தன. அப்போது எங்கள் பக்கத்து வீட்டு நாய் ஓடி வந்து, பெரிதாகக் குரைத்து அவைகளை விரட்டி, எங்களுடன் வீடுவரை துணைக்கு வந்தது.

— எஸ். ரங்கநாயகி, சென்னை — 88.

## பூனைகளுள் ஒரு விதிவிலக்கு!

நாங்கள் விழுப்புரத்தில் வசித்தபோது



''டாக்டர்! எனக்குக் காது சரியா கேட்க மாட்டேங்குது.''

''போகுது விடுங்க. இந்தக் காலத்தில் கேட்கக் கூடிய நல்ல விஷயங்க அப்படி என்ன இருக்கு?''

பக்கத்து வீட்டில் 'ஜம்பகா' என்று ஒரு பூனை இருந்தது. சாதாரணமாகப் பூனை குறுக்கே போனால் அபசகுனம் என்பார்கள். ஜம்பகா ஒரு விதிவிலக்கு. அவள் எதிரில் வந்தால் காரியம் வெற்றிதான்! பூனையின் பிறவிக் குணமான திருட்டுப் பழக்கமும் அவளிடம் கிடையாது. நடுக்கூடத்தில் பாலை வைத்தால் கூடத் தானே குடிக்க மாட்டாள். அதன் பக்கத்திலேயே நின்று, ஏக்கத்துடன் கத்தி, கேட்டுத்தான் வாங்கிக் கொள்வாள்!

— விஜயலக்ஷ்மி சோமசுந்தரம், சென்னை—38.

## என் செல்லப்பிராணி கழுதை!

என் செல்லப்பிராணி கழுதை என்று சொன்னால் ஆச்சரியமாக இருக்கிறதா! உண்மை அதுதான். தினமும் காலையில் என் கழுதைக்கு வேண்டிய உணவைக் கொடுத்து, முதுகில் சலவைத் துணிகளை வைத்துக் கட்டி விடுவேன். அது தானாகவே சலவையகத்திற்குப் போய்ச் சேர்ந்துவிடும். அங்கு சலவைத் தொழிலாளி, காத்துக் கொண்டிருப்பார். ஒருநாள் கூட நேரம் தவறிச் சென்றதில்லை என் கழுதை. வழியில் யாரும் வம்பு செய்ய அனுமதிக்காது. என் துணிகள் அதனிடம் மிகவும் பாதுகாப்பாக இருக்கும்.

— தா. நெஞ்சிற்கினியவன், அவலூர்பேட்டை.

## மஃசூக் என்றொரு மைனா

எங்கள் வீட்டில் வளர்ந்த மைனாவுக்கு மஃசூக் என்று பெயர் வைத்திருந்தோம். அது அழகாகப் பேசும். வீட்டுக் கதவை யாரேனும் தட்டினால் 'யாரது?' என்று விசாரிக்கும். வருகிற விருந்தினர்களை 'வாங்கம்மா' என்று கனிவுடன் வரவேற்கும்; தினமும் குளிக்கும், எங்கள் மூல மந்திரமான 'லாயிலாஹ இல்லல்லாஹு' என்ற வசனத்தை அழகாக உச்சரிக்கும். இப்படி எங்களைப் பரவசப்படுத்தி வந்த மஃசூக் சிறிது நாட்களுக்கு முன் காலமானபோது எங்கள் மதச் சம்பிரதாயப்படி அதை அடக்கம் செய்தோம்.

— எஸ். ஜனுல் ஆரிபா, கீழக்கரை.

## பாமியின் சாமர்த்தியம்

எங்கள் தெருவில் நுழைய நினைக்கும் திருடர்களுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கி, நான் தூங்கும் நேரத்தில் வீட்டார் யாரேனும் வந்து கதவடித்தால் என்னை மெல்லத் தட்டி எழுப்பி, என் மகளுக்குத் துணையாகத் தினமும் பள்ளிக்கூடம் சென்று, எனக்குப் பேருதவியாய் விளங்குகிறாள் 'பாமி.' பாமியைச் சிலர் கடத்திச் சென்றார்கள். எப்படியோ தப்பி, சில நாட்களுக்குள் திரும்பி வந்து, எங்களை வியப்பிலும் களிப்பிலும் ஆழ்த்தினாள்.

— எஸ். மங்கையர்க்கரசி, மதுரை—1.

## வீட்டு வாசலில் ஒரு புத்த பிட்சு

மாலை மணி ஐந்தடித்தால் ஒரு புத்த பிட்சுவைப் போல் எங்கள் வீட்டு வாசலில் 'ஆஜர்' ஆகிவிடும், எங்கள் ஊர் சின்னையா சுவாமிக் கோயில் காளை. வீட்டுக்குள் போவோர், வருவோருக்கு இடைஞ்சல் இன்றி, வழியை விட்டு ஒதுங்கி நின்று, எத்தனை நேரமானாலும் காத்திருந்து என் அம்மா கொடுக்கும் அரிசியையும், வெல்லத்தையும் தின்றுவிட்டுத்தான் போகும். ஒருமுறை ஊர் மஞ்சுவிரட்டின்போது இந்தக் காளை தலைதெறிக்க ஓடி வருவதைக் கண்டு பெண்கள் சிதறி ஓடினர். நேராக என் அம்மாவிடம் போய் நின்றது காளை. வேறு வழியில்லாமல் அம்மா வீட்டுக்குப் போக, நாய்க்குட்டியைப் போல் பணிவாகப் பின்தொடர்ந்து சென்று, அரிசி, வெல்லம் வாங்கித் தின்றுவிட்டுத் தான் திரும்பியது!

— கு. ரூபாவதி, சென்னை—13.

**ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி.ஐ.பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:**

**திருமதி எஸ். ஜனுல் ஆரிபா,
55, நடுத்தெரு,
கீழக்கரை 623 517.
இராமநாதபுரம் மாவட்டம்.**



# சொர்க்கத்தின் கதவுகள்

## 8

அன்று காலை குளியலை முடித்துக் கொண்டு மாற்றுடை அணிந்து... வீட்டுக் காரியங்களைமேற்பார்வையிட மெல்லமாடியி லின்று இறங்கி வந்த அருணா திடுக்கிட்டுப் போனாள்.

கையில் சிறு பெட்டியுடன்... புன்னகை புரிந்தபடி மகன் அஸ்வத் உள்ளே வந்து நின்றான்.

''என்ன இப்படித் திடுதிப்புன்னு? போன் கூடப் பண்ணாமல் வந்து நிற்கிறே?'' அருணா கேட்டுவிட்டாள். பின்னர் நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''உங்களைப் பார்க்க ஆசையோடு புறப் பட்டு வந்திருக்கேன். என் வீட்டுக்கு வரதுக்கு... முன்னதாகத் தெரிவித்து விட்டு தான் வரணுமா...?'' என்று மகன் பட் டென்று திரும்பிக் கேட்டுவிட்டால்?

தோளுக்கு மிஞ்சியவன். அரை டிராயரில் தெருவில் மற்றப் பிள்ளைகளுடன் கிரிக்கெட் விளையாடிய பையனை அதட்டுவதுபோல இப் போது பேச முடியுமா?

''ஒரு வார்த்தை போனில் சொல்லியிருக் கலாம்னு கேட்டேன். தெரிஞ்சா உனக்குப் பிடிச்ச டிபன் பண்ணச் சௌகர்யமாயிருந் திருக்கும்...!''

''பரவாயில்லே அம்மா... நான் குளிச் சுட்டுக் காப்பி மட்டும் சாப்பிட்டுட்டுக்கிளம் பப் போறேன்,'' என்று கூறிவிட்டு அவன் வேகமாகப் பின்னாலிருந்த அறைக்குள் சென்று பெட்டியைப் படுக்கையின் மீது வைத்தான்.

அருணாவின் நெஞ்சிலே ஒரு நெருடல். அஸ்வத் எதற்காக இப்படி அவசரமாகக் கிளம்பி வந்திருக்கிறான்?

கணவன் வேலை பார்த்த நிறுவனத்தின் உயர் மட்டத்து அதிகாரியாகி விட்டதும் அவள் பலவிதத்திலும் தங்களது வாழ்க்கை நிலையை உயர்த்திக் கொள்ளப் பாடுபட் டாள்.

வசதியானகுடும்பத்திலிருந்துதான் அவள் வந்தவள். அதனால் கல்யாணத்தைச் சிறப் பாகச் செய்து — தேவைப்பட்ட நகைகளைப் போட்டு — சீர் வழங்கி அவளைப் புக்ககத் திற்கு அனுப்பியபின் அவள் அண்ணா தன் மணிபர்சை இறுக்கமாக மூடிக் கொண்டு விட்டிருந்தான்.

அவள் எதிர்பார்த்ததுபோல் அவளுக்குத் தமையன் ஒரு பங்களாவை வாங்கிப் பரி சாகத் தந்துவிடவில்லை.

அவள் கணவன் கடன் வாங்கி — அவள் சேமிப்பில் கையை வைத்து... உருண்டு புரண்டு... கட்டிக் கொண்டிருந்த வீடு அது. பிரபலஸ்தர்கள் பலர் வசித்த பகுதியில்தான் அவர்களது வீடு கட்டப்பட்டிருந்தது.

ஆனால் அது ஒரு குட்டி பங்களா...

வாசலில் கூர்க்கா — வந்தவர்களைக் கண்டு ஆக்ரோஷமாகக் குரைக்கும் பெரிய நாய்... போன்ற ஆடம்பரங்கள் இல்லை. சின்னஞ்சிறு தோட்டத்திற்குள் தலையை உயர்த்திக் கொண்டு நின்றதொரு வீடு.

அவளது தோழிகளின் பங்களாக்களைப் போன்று பெரியதொரு வரவேற்பறை கிடை யாது. தலைக்குமேல் காற்றில் சிணுங்கிச் சப் திக்கப் பெரிய ஷாண்டலியர் விளக்கு தொங்கவிடப்பட்டிருக்கவில்லை. இந்தச் சின்ன முன்னறைக்கு அத்தனை பெரிய சர விளக்குத் தேவையில்லை. மேலும் அதைத் தூசித் துடைத்துச் சுத்தமாக வைத்துக்கொள் வதற்குள் பிராணன் போகும் என்று கணவன் மறுத்தது பெரும் குறையாக இருந்தது. எத் தனைதான் அவள் பணக்கார வேஷம் போட்டும்... பக்கத்து பங்களாக்காரர்க ளுக்குச் சமதையாக வாழ முடியவில்லை என்றதொரு வயிற்றெரிச்சல் அவளுக்கு.

அதை நிவர்த்தித்துக் கொள்ள அவள் தன் அருமை மகனைப் பெரிதும் நம்பியிருந் தாள்.

கல்யாண மார்க்கெட்டில் அவனுக்கு ஒரு பெரிய புளியங்கொம்பைப் பிடித்து விட் டால்?

குளியலை முடித்துக் கொண்டு வெளியே செல்லத் தயாராக வந்து நின்ற மகன் முன் காப்பித் தம்ளரைக் கரிசனத்துடன் கொண்டு வந்து வைத்தாள் அருணா.

''எங்கே புறப்பட்டு விட்டாய்?'' என்று அவனிடம் கேட்க அவளுக்கு அச்சமாக இருந்தது.

''அஸ்வத்! அப்பாவைப் பார்த்தியோ...?'' என்று சுற்றி வளைத்தாள்.

''பார்த்தேன்—பேசினேன்—அவர் காப்பி சாப்பிட வர நாழியாகும்னார்.''

''ஆமாம். நேத்திக்கு அவர் போர்டு மீட்டிங்கிலிருந்துவர நேரமாச்சு. யாரோ பம்பாயிலிருந்து வந்ததொரு வியாபாரியாம்— அவருக்கு விருந்தாம்... ராத்திரி பதினொரு மணிக்குமேல்தான் வந்தார். தூங்கட்டும்னு நான் எழுப்பலை...''

''இதோ அப்பா வந்தா சொல்லிடுங்கோ—நான் பெரியப்பா வீட்டுக்குப் போயிருக்கேன்னு...''

திடுக்கிட்டுப் போனாள் அவள்... தன்னுள் எழுந்த கோபத்தை அடக்கிக் கொண்டு முறுவலித்தாள்.

''காப்பி டிபன் சாப்பிட்டுவிட்டு மெதுவாகப் போகலாமே அங்கே?''

''அங்கேயே போய் ஏதாவது அவாளோட சாப்பிட்டுக்கிறேன் அம்மா...!''

முகம் சுருங்கிப் போனாள் அருணா.

''இப்பத்தான் பெரியம்மா ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பியிருக்கா. பெரியப்பாதான் சமைக்கிறார். பெரியம்மா இன்னும் கஞ்சி ஆகாரத்தில் இருக்கிறதாகக் கேள்வி...!'' என்று இழுத்தாள் அருணா.

''அந்தக் கஞ்சியை நானும் கொஞ்சம் குடிக்கிறேன்!''

''அஸ்வத்! ஏன் இப்படி ஏடாகூடமாப் பேசறே?''

''அதுக்கு நீங்கதான் அம்மா காரணம்...''

''பெரியம்மா சாகப் பிழைக்க ஆஸ்பத்திரியிலிருந்தப்போ நீங்கள் ஏதாவது உதவி பண்ணினேளா?''

லக்ஷ்மி



''பெரிய நர்ஸிங் ஹோமிலே வச்சுப் பார்த்துக் கொண்டு இருந்தப்போ நான் என்ன உதவி செய்ய முடியும் சொல்லு...?''

''அடிக்கடி போய்ப் பார்த்தேளா?''

''இதென்ன கேள்வி? அவனை இன்டென்ஸிவ் கேர் யூனிட்டிலே அனுமதிச்சிருந்தா... அங்கே போனா, நர்ஸ் உள்ளே விட்டால் தானே?''

''பெரியப்பாவைப் பார்த்தாவது நீங்கள் ஏதாவது உதவி செஞ்சேளா...?''

''போன்லே விசாரிச்சேன்—ஆஸ்பத்திரியிலேயிருந்து திரும்பி வந்ததும், அப்பாவும் நானும் போய்விட்டு வந்தோம்— அது கிடக்கட்டும்! எதுக்கு இந்தக் குறுக்கு விசாரணை? பெரியப்பா உன்கிட்டே என் மேலே ஏதாவது புகார் பண்ணினாரா என்ன?''

''சே! அவர் அப்படியெல்லாம் மட்டமா நடந்துக்கிற மனுஷர் இல்லேம்மா. ஏதாவது பணம் வேணுமான்னு கேட்டப்போ கூட வேண்டாம்னு மறுத்துவிட்டார்!''

''பிள்ளையா குட்டியா — அவா ரெண்டே பேர் — வர பென்ஷன் — ஏதேஷ்டம். டியூஷன்ல வர காசையெல்லாம் சேமிச்சு வச்சுண்டு இருப்பார். அதுதான் உன்னிடம் கேட்கவில்லே!''

''அவர் கேட்காவிட்டால் கூட நீங்கதானே போய் உதவியிருக்கணும்... நம் கடமை அம்மா.... அடி நாளில் அப்பாவுக்கு அவர் எத்தனை செய்திருக்கார்...? பள்ளிக்கூடப் பையனா நான் படிக்கிற காலத்திலே... சூடா சாப்பாட்டை டிபன் காரியரிலே எடுத்துக் கொண்டு அத்தனை தூரம் நடந்து வந்து கொடுத்துவிட்டுப் போவார்...!''

''பொழுது போகலே... ஏதோ பண்ணிண்டு இருந்தார். அதையெல்லாம் இப்போ சொல்லிக் காட்டத்தான் மெனக்கெட்டு பெங்களூரிலேயிருந்து இங்கே நீ புறப்பட்டு வந்திருக்கிறயா...?'' அடக்க முடியாத கோபத்தில் கேட்டு விட்டாள் அருணா.

''அப்படித்தான் வைச்சுக்கோங்க...!'' என்று பதிலளித்து விட்டு... காலில் செருப்புகளைத் திணித்துக் கொண்டு... மகன்... தலையை ஆட்டி விடைபெற்றுக் கொண்டு வெளியே சென்றது அவளுக்கு அளவற்ற அதிர்ச்சியாக இருந்தது.

'பாவி மனுஷன்! உள்ளூரிலேயே இருந்து கொண்டு எத்தனை குழப்பங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்?' தன் மைத்துனரை நொந்து கொண்டாள். ஆசைக்கு ஒரு மகளும் — ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும் என்று அடக்கமான குடும்பம் என்று அவள் நிம்மதியாக வாழ முடியவில்லையே?'

ஐஸ்வரியாவை நல்ல இடத்தில் கொடுக்கலாம் என்று திட்டமிட்டுக் கொண்டிருந்த போது அந்த அசட்டுப் பெண் காதல் என்று ஒருசாதாரணஇடத்துப்பையன்மேல் ஆசைப் பட்டு விட்டாள்! அதற்கு அவள் ஒரேயடியாக மறுத்த போது... 'தற்கொலை செய்து கொண்டு விடுவதாக ஐஸ்வரியா பயமுறுத்தி விட்டாள். வீட்டை விட்டுப் பெரியப்பாவுடைய வீட்டிச் போய்த் தங்கி விட்டாள். அவர்து துணையுடன் அந்தப் பிள்ளையையே கல்யாணம் செய்து கொண்டதொரு சங்கதியை ஆயுள் உள்ளவரை மறக்க முடியுமா? நல்லவேளை... அமெரிக்காவுக்கு வேலை தேடிக் கொண்டு போய் விட்டான் மாப்பிள்ளை!

'என் பெண்... அமெரிக்காவில் இருக்கிறாள்,' என்று தோழிகளிடம் பெருமையோடு சொல்லிக் கொள்ளவாவது முடிந்தது.

இல்லாவிட்டால்...? நாகலிங்கத் தெரு நாலாம் நம்பர் வீட்டிலே என் மாப்பிள்ளை.. குடியிருக்கிறான்... ஸ்கூட்டர் கூட வாங்கிக் கொள்ளவில்லை. பஸ்ஸில்தான் ஆபீசுக்குப் போகிறான். வீடு கட்டிக் கொள்கிறதாவது... இந்த ஜென்மத்தில் நடக்காத காரியம்... என் பெண் கழுத்து மட்டும் சம்சாரத்திலே போய்த் தானே மாட்டிக் கொண்டிருக்கிறாள். அப்பா அம்மா — கல்யாணத்துக்கு நிற்கும் இரண்டு தங்கைகள்—விதவையாகிவிட்ட ஒரு அக்கா... காலேஜ் படிப்பு முடியாத ஒரு மைத்துனன்... போதுமா? இத்தனை பேரையும் வைத்துச் சமாளிக்கணும் — இந்த மாதிரி இடத்திலே என் பெண்ணுக்குக் காதல் வந்ததே... என்று யாரிடமும் சொல்லிக் கொள்ள முடியாது அவள் தவித்தாள். நல்லவேளையாக அமெரிக்க வாழ்க்கை கைகொடுத்தது... நாலு பேரிடம் தைரியமாக வாயைத் திறக்க முடிந்தது. ஐஸ்வரியாவின் கல்யாணத்திற்குக் காரண கர்த்தராக இருந்த தன் மைத்துனரை அவள் வெறுத்தாள். கணவருக்குப் புத்தி

## ''இப்படியும் ஒரு விவாகரத்து''

மத்திய இங்கிலாந்தில் டாம்வொர்த் என்ற நகரில் வாழ்ந்துவரும் கணவன்—மனைவி பெட்ரீசியா, பாபு என்பவர்கள். இவர்கள் கடந்த 12 வருட காலமாகப் பேசாமலேயே தங்கள் கருத்துக்களைத் துண்டுக் காகிதம் மூலமே தெரிவித்து ஒரே வீட்டில் வாழ்ந்து வந்தனர். தற்போது மனைவி பெட்ரீசியா தன் கணவனுக்குத் துண்டுக் காகிதத்தில் ''எனக்கு விவாகரத்து வேண்டும்'' என்று எழுதித் தந்தாள். அதற்கு அக்கணவன் 'நல்லது! வழக்கறிஞரிடம் போ' என்று எழுதித் தந்தாராம்!



—தகவல்: வி. ரவிச்சந்திரன்.

"நீங்க எடுத்திட்டிருக்கிற படம் சுப முடிவுன்னு சொன்னீங்க. இப்போ சோக முடிவுங்கறீங்களே?"

"படம்பாதிஎடுத்துமுடிக்கிறதுக்குள்ள சொத்து; வீடு, பணமெல்லாம் போயி டுச்சே!"

— இழை அ. கதிர்வேல்.





டவுன் பஸ் பயணி: "கண்டக்டர் ஏன் டிரைவரைப்பார்த்து,வண்டியை இன்னும் அதிகமா குலுக்கச் சொல்றார்?"

அருகில் நிற்பவர்: "இன்னும் கொஞ்சம் பேரை வண்டியில் ஏற்ற இடம் வேணும்னு தான்!"

— இரா. சம்பத்குமார்.

சொல்லாது அவர் போன போக்கில் தானும் தலையை ஆட்டின விமலா அவளுக்கு விஷமாகிப் போனாள்.

'இப்போது தன் பிள்ளையையும் அவர் கொக்கி போட்டு இழுக்கிறாரே, கிழவர்... என்ன துணிச்சல்...!

கொஞ்ச நேரத்தில் அவள் கணவன்:... ஸ்நானத்தை முடித்துக் கொண்டு வந்தார். துண்டால் தலையைத் துவட்டிக் கொண்டு... கீழே இறங்கி வந்தார்.

பூஜையறையை எட்டிப் பார்த்துவிட்டு... விபூதியை நெற்றியில் கீற்றாக அவர் பூசிக் கொள்ளும் வரை, மௌனமாக இருந்தாள் அருணா.

காப்பி டிபனுக்கு உட்கார்ந்த அவர் முன்... இட்டிலி... சட்டினி பாத்திரங்களைப் பரபரப்புடன் கொண்டுவந்து வைத்தாள்.

"திடீர்னு இந்தப்பிள்ளை எதுக்காக இங்கே வந்தானாம்?" என்று தன் மனைவியைக் கேட்டார் கணேசன்.

"உங்ககிட்டே சொல்லியிருப்பான்னு நினைச்சேன்..." என்று முனகியபடி... சாம்பார்கிண்ணத்தை அருகில் நகர்த்திவைத்தாள் அருணா.

"எனக்கு ஒரே தூக்கக் கலக்கம் — வந்தான் என்னமோ பேசினான் — எங்கே அவன்...?" சாம்பாரில் முக்கிய இட்டிலித் துண்டத்தை வாயில் போட்டுக் கொண்டபடியே கேட்டார், கணேசன்...

"இந்தப் பிள்ளையின் மனசை உங்க அண்ணா ரொம்பவே குழப்பி வச்சிருக்கார். கடிதாசி போட்டு — போனில் கூப்பிட்டு என்னவோ வேப்பிலை அடிச்சிருக்கார்... பையன், பெரியம்மாவைப் பார்க்க லீவு எடுத்துக் கொண்டு புறப்பட்டு வந்துவிட்டான். 'பண உதவி செய்வான் போலிருக்கு... எனக்கு ஒண்ணுமே பிடிக்கலை... வந்ததும் வராததுமா டிபன் சாப்பிடாமல் பெரியப்பாவைப் பார்க்கக் கிளம்பியிருக்கான். எப்போ வருவானோ என்னவோ என்கிட்டே எதுவும் விவரமாச் சொல்லலை..." என்ற அவளது குரலில் கோபமும் துயரமும் தொனித்தன. தாடை இறுகிப் போனார் கணேசன்.

ஒதுங்கி வாழ்வோம் என்று பிரிந்து வந்த பிறகு கூட இந்த அண்ணா ஏன் இப்படி அவனது குடும்பத்துச் சங்கதிகளில் தலையிட்டுக் குழப்புகிறார்... அவனது உத்தரவைக் கேட்காது அவன் பெற்ற பிள்ளையிடம் பண உதவியை நாடுவது எத்தனை தவறு. இந்த வயசில் அவருக்கு அறிவு எங்கே போச்சு...?

"வரட்டும் அவன்...? நான் கேட்கிறேன்..." என்று ஆத்திரத்துடன் சீறினார் கணேசன்.

"நீங்க பேசாம இருங்கோ. நான் அவனை மெள்ளக் கேட்டுப் புத்திமதி சொல்றேன். ஐஸ்வரியாவுக்கு இவன் கொஞ்சமும் கு றை ஞ் ச வ னி ல் லை. பிடிவாதம் நிறைய இருக்கு. எல்லாம் அந்த விமலா கொடுத்த இடம். நான் பெத்த குழந்தைகளை நான் எடுத்து வளர்க்க விட்டாளோ அவள்? தானே சீராட்டிப் பாராட்டி... செல்லம் கொடுத்துக் குட்டிச்சுவராக்கி வைத்திருக்கிறாள்!" அருணாவின் குரல் தழுதழுத்தது.

அஸ்வத் என்ற அந்தக் குட்டிச்சுவர் அது சமயம்... பார்வதி அம்மாள் வீட்டுத் தோட்டத்தில் வேகமாக நடந்து... அவுட் ஹவுசிற்குள் விரைந்து...முன்னறையில்நின்றுகொண்டிருந்த சுவாமிநாதனை அணுகி, "பெரியப்பா...!" என்று கூவியதும்... அவர் அவனைக் கைநீட்டி இறுக்கமாகத் தழுவிக் கொண்டார்... "குழந்தே! எப்ப வந்தே...? சௌக்கியமா கண்ணா... எனக் கண்கலங்கி நின்ற காட்சியை அருணாவால் கற்பனையால் கூடப் பார்த்திருக்க முடியாது!

(தொடரும்)




# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்,
தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி ·வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 007**

---

எமது தைலம் கிடைக்குமிடங்கள் : 1. சேலம் — ரோசு மெடிக்கல்ஸ் 2. ஆத்தூர் — முத்து மெடிககல்ஸ், 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் — ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. திருச்செங்கோடு — சீனிவாசா மெடிக்கல்ஸ், 7. தர்மபுரி — விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணு மெடிக்கல்ஸ் 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள் 11. சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ் 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ் 14. காஞ்சிபுரம் — லஷ்மி மெடிக்கல்ஸ் 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ் 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ் 18. வேலூர் (NA) — பாரத் மெடிக்கல்ஸ் 19. திருப்பத்தூர் (NA) — லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கலஸ் 21. கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ் 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ் 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் — தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் — N. லஷ்மணன் மருந்துக்கடை 27. தேனி — ஆண்டாள் மெடிக்கல்ஸ் 28. மதுரை — குமார் மெடிக்கல்ஸ் 29. மதுரை — ஸ்டேட் மெடிககல் கார்பரேசன் (24 மணி நேர கடை) 30. ராமநாதபுரம் — பாத்மா மெடிக்கல்ஸ் 31. காரைகுடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ் 32. விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ் 33. தூத்துக்குடி - அன்பு மெடிக்கல்ஸ் 34. திருநெல்வேலி — கோமதி மெடிக்கல்ஸ் 35. பாளையங் கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ் 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை 37. தென்காசி — M.R. மெடிக்கல்ஸ் 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ் 39. சிவகாசி — சிவகாசி மெடிக்கல்ஸ் 40. கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல்ஸ் 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ் 42. உடுமலை — ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ் 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ் 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிக்கல்ஸ், காந்திபுரம் 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ் 47. சென்னை-17 — சுந்தரம் ஸ்டோர்ஸ் 48. கோபி — வாணி பார்மஸி 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக கல்ஸ் 50. திருச்சி ஜங் — சுபாஷி மெடிக்கல்ஸ் 51. புதுக்கோட்டை — மீனு பார்மஸி 52. திருவாரூர் — அன்ன பூர்ணு மெடிக்கல்ஸ் 53. மாயவரம் — ஸ்வாமி மெடிக்கல்ஸ் 54. சிதம்பரம் — ராஜா பார்மஸி 55. விருத்தாச் சலம் — ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் — மீனுஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிக்கல்ஸ் 60. நாமக்கல் — சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி — சரோஜா டரக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி — ராஜா மெடிக்கல்ஸ். 63. சென்னை-15-மஹாவீர் சந்த் & கோ (கெமிஸ்ட் & டிரகிஸ்ட்) 64. நாகை-ரங்கா ஸ்டோர்ஸ 65. மைலாப்பூர் — R.R. பார்மஸி 66. தி. நகர் சுந்தரம் ஸ்டோர்ஸ் (கெமிஸ்ட்) 67. சேலம் — சாமுண்டி சூப்பர் மார்க்கெட் 68. கடலூர் — சிவா மெடிக்கல்ஸ் 69. ஊட்டி — நீலகிரிஸ் டிரக் ஸ்டோர்ஸ் & பார்மஸி 70. மீனுட்சி மெடிகல்ஸ், சென்னை-4

---




சபேசன் இந்த முறை சொந்த ஊருக்குத் திரும்பிய போது அவரது அமெரிக்க நண்பர் கிங்ஷனும் ஒட்டிக் கொண்டார். 'ஒரு முறை யாவது இந்தியாவைச் சுற்றிப் பார்த்துவிட வேண்டும்' என்பது கிங்ஷனின் வெகு நாளைய ஆசை. அதுவும் அவருக்கு கிராமங் கள் மீது ஒரு தணியாத ஆர்வம். அரசியல், ஊழல், விஞ்ஞான முன்னேற்றம்... இத்யாதி இத்யாதி என்று இந்தியாவைப் பற்றி சபேசன் நிறையச் சொல்லியிருந்தார். அதுவே, அவர் மனத்தில் ஒரு த்ரில்லை ஏற்படுத்தியிருந்தது.

நியூயார்க்கிலிருந்து ஒருநாள் விமானத் திலும் டெல்லியில் இறங்கி,இரண்டு நாட்கள் எக்ஸ்பிரஸ் ரயிலிலும் நான்காம் நாள் சென் னையிலிருந்து ஐந்து மணி நேர பஸ்பிரயாணத்

# கண்ணில் தெரியும் கனவுகள்

லா. ரா. சிவராஜ்



திலுமாகக் களைத்துப் போய் குப்பம்பட்டியில் இறங்கினார்கள்.

ஊருக்குள் செல்ல ஒரு கி. மீட்டர் நடந்தாக வேண்டும். தூரத்தில் தெரிந்த தென்னந் தோப்புகளையும் பச்சைப் பசேல் வயல் வெளிகளையும் எதிரே தென்பட்ட வித்தியாசமான மனித முகங்களையும் ரசித்தவாறே நடந்தார் இங்ஷன். வழியில் சிலர் சபேசனிடம் வலிய வந்து குசலம் விசாரித்துச் சூழ்ந்து கொள்ள, ''வீட்டில் சந்திக்கிறேன்,'' என்று நைஸாக நழுவினார்.

மேற்குச் சாலையில், மூங்கிலால் பின்னப் பட்ட சிறிய கூடைகளைச் சுமந்து ஆண்களும் பெண்களும் சரளைக் கற்களைக் கொட்டிக் கொண்டு புதிய சாலைக்கான பணியில் ஈடு பட்டிருந்தார்கள். சற்று அருகில் தார் ஊற்றப் பட்ட கரடுமுரடான சரளையில் ரோடு ரோலர் முன்னும் பின்னும் வேகமாக உருள; சாலை வேலை ஜரூராக நடந்து கொண்டிருந்தது. 'என்ன, சுறுசுறுப்பாய் வேலை செய்கிறார்கள்!' இங்ஷனின் முகத்தில் ஒரே வியப்பு. நண்பரின் நீளமான முகத்தை ஏறிட்டார். சபேசன் பதிலாக ஒரு புன்னகையை உதிர்த்து விட்டு வெறுமையாகவே நடந்தார்.

சின்னசாமி தெருவின் முனையில் ஒரு பெரிய 'போரிங்' லாரி ஒன்று அடிகுழாய் போடுவதற்காக இரும்பு பைப்களை பூமியைக் குடைந்து வேகமாக உள்ளே இறக்கிக் கொண்டிருந்தது. சுற்றிலும் மெல்லிய பரபரப்புடன் உள்ளூர்ப் பிரமுகர்களின் சிறு கூட்டம். இங்ஷனுக்குப் புரிந்துவிட்டது. 'அட, பரவாயில்லையே! அரசு கிராம மக்கள் மீது இவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறதே!' என்று மகிழ்ந்தார். இந்தியாவில், அரசு பொது ஜனங்களின் நலனில் ஆர்வம் கொள்வதில்லை என்றும் ரெட் டேப்பிஸம் அங்கிங்கெனாதபடி எங்கும் உண்டு என்றும் பத்திரிகைகளில் படித்திருக்கிறார். சபேசனும் கூட அப்படித்தான் கூறியதாக நினைவு.

''வெள்ளைக்காரன் டோய்'' என்று கத்திய படி சிறுவர் கும்பல் ஒன்று, 'பட்டிக்காட்டான் மிட்டாய்க் கடையை பார்க்கிறதைப் போல்' பழமொழியை நிரூபிக்கும் வகையில் சபேசன் விரட்டியதையும் பொருட்படுத்தாமல் பின் தொடர்ந்தது. இங்ஷன் சிரித்துக் கொண்டார். சபேசனைக் கூட இப்படித்தான் அவரது அமெரிக்க கிராமத்தில் சிறுவர்கள் வேடிக்கை பார்ப்பார்கள். ஆனால் இந்தச் சிறுவர் தொடர் படலமெல்லாம் அங்கே அறவே கிடையாது.

அந்தத் தெரு நுழைவில் ஆரம்பித்து இறுதி வரை நீண்டிருந்த சாக்கடையைச் சில நகர சுத்தித் தொழிலாளர்கள் சுத்தம் செய்து கொண்டிருந்தார்கள். தெரு, ஈரத்துணி போட்டுத் துடைத்து விட்டாற்போல் பளிச்சென்று சுத்தமாக இருந்தது. இது, முன்பு சபேசன் சொல்லியிருந்ததற்கு நேர்மாறாக இங்ஷனுக்குத் தெரிந்தது.

'ஸ்ரீனிவாஸா மான்ய துவக்கப் பள்ளி' என்ற ஆங்கிலமும் தமிழும் கலந்து எழுதப் பட்டிருந்த போர்டைத் தாங்கிக் கொண்டிருந்த பள்ளியைக் கடந்து செல்லும் போது பள்ளியினுள், வயதான சிலர் வேஷ்டி, புடவையைப் பெற்றுக் கொண்டு குதூகலத்துடன் இவர்களைத் தாண்டியபோது, இங்ஷனால் அதைச் சுலபமாகப் புரிந்து கொள்ள முடிந்தது. அவர் உதடுகளில் புன்னகைக்

கிரல்கள் மின்னின. ஆனால் சபேசனிடம் எந்தவித பாவமும் காணப்படாதது அவருக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணியது. 'பத்திரிகைச் செய்திகளும் சபேசனின் கூற்றும்பொய்யானதோ?' என்று கூட நினைத்துப் பார்க்க ஆரம்பித்துவிட்டார்.

ஐந்தடி மதில் சுவர் எழுப்பப்பட்டு மேலே முள் கம்பிகளுடன் நீலநிற டிஸ்டம்பர் அடிக்கப்பட்டு, டீ. வி. ஆன்டெனாக்களைத் தலையில் செருகி நவீன மாடலில் தனித்து நின்றது சபேசனின் வீடு. குப்பம்பட்டியில் அவரது வீடுதான் பிரம்மாண்டமான வீடு. நகரத்தைப் போலவே அதனுள் சகல வசதிகளும் அடக்கம். சபேசன் எந்த விதத்திலும் மனைவி மக்களைக் கஷ்டப்படுத்த விரும்பியதில்லை. நிலத்தில் மூன்று போகம் விளையும். இருந்தாலும் தன் பங்கை — மொத்தமாக ஓர் ஐந்தி லக்ஷத் தொகையை அனுப்பி விடுவார். வருடத்தில் ஒரு தடவையாவது எக்கச்சக்கமாக சூட்கேஸில் அடக்கிக் கொண்டு வந்து, இரண்டுமூன்று வாரங்கள் தங்கிச் செல்வார். இப்போது தூதரகத்தில் கூடவே பணிபுரியும் நண்பர் கிங்ஷனுடன்.

வீட்டின் முன்கேட்டைத் தள்ளிவிட்டு உள்ளே நுழைந்தபோது பார்வதி ஒருகணம் அசந்து விட்டாள். "லெட்டர் போட்டிருந்தா காரை அனுப்பிச்சிருப்பேன்ல?" என்று கணவனைக் கோபித்துவிட்டு கிங்ஷனைப் பார்த்துத் தமிழில், "வாங்க!" என்றாள். கிருஷ்ணன் ஓடி வந்து, "அப்பா" என்று உற்சாகத்தில் மிதந்துவிட்டு, இருவருடைய சூட்கேஸையும் வாங்கிக் கொண்டான். அடுத்த நிமிடத்தில் சபேசனின் வீடு களை கட்டிவிட்டது.

பேண்ட்டைக் கழற்றிக்கைலிக்குள் புகுந்து முகம்கழுவி, மனைவி கொடுத்தஹார்லிக்ஸை கிங்ஷனுடன் உறிஞ்சிவிட்டு, வெளியே வந்து கேட்டருகில் கட்டிலைப் போட்டு ஹாயாக உட்கார்ந்த போது, மெலிதாக இருட்டிவிட்டிருந்தது. தெரு விளக்குகள் சீராக விடி வெள்ளி போல் பளிச் பளிச்சென்று கண்ணைப் பறித்து மினுமினுத்தன. கிங்ஷனுக்கு வியப்பு இன்னும் ஒருபடி மேலிட்டது.

ஊரில் சபேசனையொத்த தலைகள், 'நமக்கு ஏதும் அமெரிக்கச் சரக்குக் கிடைக்குமா?' என்றநப்பாசையில்எய்ட்ஸ்முதல்எல்லாவற்றையும் விசாரித்தன. கிங்ஷனை ஒரு மாதிரியாகப் பார்த்துவிட்டு பாஷை தெரியாததால் பற்களால் சிரித்தார்கள் வேறு சிலர்.

குப்பம்பட்டியில் நுழைந்தது முதல் தான் கண்ட அனைத்தையும் ஒருமுறை அசை போட்டு விட்டு கிங்ஷன் பொறுமையாக, "என்ன மிஸ்டர் சபேசன்! உங்கள் நாட்டைப் பற்றி நான் படித்திருந்ததும் நீங்கள் சொன்னதும் பொய் போல் தெரிகிறதே?" என்று கேட்டார் சிரித்தபடி ஆங்கிலத்தில்.

"கிங்ஷன்! நீங்க இந்தக் கேள்விய முன்னாடியே கேப்பீங்கன்னு நெனச்சேன். பரவாயில்ல... யார் செஞ்ச புண்ணியமோ? எங்க ஊர் கொஞ்சம் கொடுத்து வச்சிருக்கு: ஆமாம். இந்த ஊர்' இருக்கும் தொகுதில சட்டமன்றத்துக்கு இடைத்தேர்தல் நடக்கப் போகுது. அதனாலதான் இந்த ஜோடனையெல்லாம். இன்னும், நீங்க இதுமாதிரி காட்சிகளை நெறையப் பாப்பீங்க. மத்தபடி நீங்க வர்றப்பப் பார்த்தத, எங்க நாட்டு மக்கள் கனவுல மட்டுந்தான் காண முடியும்" என்று புரியும்படி விவரித்துவிட்டு அவரது முகத்தை நோக்கினார் சபேசன்.

இப்போது கிங்ஷன் சலனமற்றிருந்தார்.



துணை ஆசிரியர்: "பெரும்பாலான வாசகர்கள் வெங்காயம் உரிச்ச அனுபவங்களைத்தான் எழுதி அனுப்பி இருக்காங்க."

ஆசிரியர்: "எதுக்கு?"

துணை ஆசிரியர்: "உங்களைக் கண் கலங்க வைத்த நிகழ்ச்சி எதுன்னு நாம அறிவிச்சிருந்த போட்டிக்குத்தான்."

— கீழை அ. கதிர்வேல்.

உதவி டைரக்டர்: நம்ம டைரக்டர் சொல்றதை ஒளிப்பதிவாளர் செய்யுறாரோ இல்லையோ, சென்ஸார்ஸ் செய்துடறாங்க!

மற்றவர்: எதைச் சொல்றீங்க?

உதவி டைரக்டர்: 'கட்' டைத்தான் சொல்றேன்!

— கடுவை கோபால்சாமி.



"இதோ பாருங்கோ. சமையல் மட்டும் 'ஏ கிளாஸா' இருக்கணும். குறையே சொல்ல முடியாதபடி அமையணும். அயிட்டம் குறைஞ்சிருந்தாலும் பரவாயில்லை. பண்ண அயிட்டம் ஒவ்வொண்ணும் வாயைவிட்டுப் பிரியாமல் இருக்கணும். என்னைக் கேட்டா... வேம்பு ஐயரையே சமையலுக்கு ஏற்பாடு பண்ணிடுங்கோ. கூடக் கொஞ்சம் பணம் கேட்டாலும், சமையல் நளபாகமாக இருக்கும்.

நாலாவது முறையாகக் கூப்பிட்டனுப்பியபின் வந்து சேர்ந்தார் வேம்பு ஐயர். தயங்கியபடி விஷயத்தை விளக்கினார்.

"அப்படியா...? நளினிக்கு ஒண்ணுமே தெரியாதே... எனக்கென்னவோ பயமா இருக்கு..."—ராஜி நீட்டியபடி தன் மனத்தைத் திறந்தாள்..

"அரையும் குறையுமாத் தெரிஞ்சுக்கறதை விட... ஒண்ணும் தெரியாததே உத்தமம்.... ஆனா... நேரில பார்த்தால் நம்பவே முடியலையே... அத்தனை சாந்தமா இருக்காளே அந்தம்மா..."

சுந்தரத்தின் கேள்விக்கு வேம்பு ஐயர் சட்டென்று பதில் சொல்லவில்லை.

"வாஸ்தவம்தான்... அந்தம்மாவை நேரில பார்த்தவா யாரும் நான் சொல்றதை நம்ப மாட்டா. எல்லா விஷயத்திலும் சாந்தமா நடந்துக்கிற அந்தம்மா, சாப்பாட்டு விஷயம்னு வந்துட்டா மட்டும் ஒரேயடியா மாறிடுவா. சமையல்ல தப்புப் பண்ணிட்டா அவங்களை நிமிர்ந்து பார்க்கவே முடியாது. அத்தனை கோபம் வந்துவிடும். தட்டிலே மீதி வெச்சுட்டாலும் அந்தம்மாவுக்குப் பிடிக்காது. முணுமுணுத்துக் கொண்டே இருப்பாள். 'நெர்வஸ்னஸ்லயே' தப்பு பண்ணிடுவேனோன்னு பயம். அதுக்காகத்தான் சொல்றேன். என்னோட 'அஸிஸ்டண்டு' வேணுவை அனுப்பிச்சுடவா. நன்னா சமைக்கிறான்..."

"ஐயையோ...! வேம்பு ஐயரே அதை மட்டும் செஞ்சுடாதீங்க. உங்களுக்குப் புண்ணியமாப் போகும். சம்பந்தி மாமி... குறிப்பா உங்களைத்தான் சமையலுக்கு ஏற்பாடு பண்ணச் சொன்னா, தெரியுமோ...?"

"இதோ பாருங்கோ. சமையல் மட்டும் 'ஏ கிளாஸா' இருக்கணும். குறையே சொல்ல முடியாதபடி அமையணும். அயிட்டம் குறைஞ்சிருந்தாலும் பரவாயில்லை. பண்ண அயிட்டம் ஒவ்வொண்ணும் வாயை விட்டுப் பிரியாமல் இருக்கணும். என்னைக் கேட்டா... வேம்பு ஐயரையே சமையலுக்கு ஏற்பாடு பண்ணிடுங்கோ. கூடக் கொஞ்சம் பணம் கேட்டாலும், சமையல் நளபாகமா இருக்கும். சித்தாளும் சுத்தமாக இருப்பார்கள். எப்படியாவது வேம்பு ஐயரையே ஏற்பாடு பண்ணிடுங்கோன்னு...' ரெண்டு மூணு முறை சொல்லிவிட்டாள்... நாளைக்கு, கல்யாணத்திலே இதனால் ஒரு தகராறு வரக்கூடாது பாருங்கோ..."

"நீங்க இத்தனை தரம் சொல்லும்படி நான் வெச்சுண்டுட்டேன்னா என்ன அர்த்தம்...? எனக்கு அந்தம்மா எதிரே வரவே பயம். அந்தம்மாதான் உங்களுக்கு வரப் போகிற சம்பந்தின்னு கேட்டதிலேந்து வயத்திலே புளியைக் கரைக்கிறது. என் சமையலை இந்த ஊரே புகழுறது. இந்த ஊர் மட்டும் என்ன

# ருசி

பூஜா



கல்கத்தா ராமர் கோவிலுக்குப் போனதடவை ராமநவமியின் போது போயிருந்தேன். நான் பண்ணின சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டவர்கள் அப்படியே சொக்கிப் போய் விட்டார்கள். ஆனால்கூட அந்தம்மா, பின்னால் புகழுறுங்களோ என்னமோ எதிரில் ஆயிரம் தப்புக் கண்டுபிடிப்பாங்க. சமையல்ல அவங்க ராணி. இத்தனைக்கும் வாயில போட்டு எதையும் ருசி பார்த்து நான் பார்த்த தில்லே. வாசனையிலேயே, உப்பு குறைவா, புளி தூக்கலா, காரம் போதுமா என்று கண்டுபிடிக்கச் சொல்லிடுவாங்க. அவங்க குற்றம் கண்டுபிடிக்காத சமையலே இல்லே. போன மாசம் வக்கீல் நரசிம்மாச்சாரியோட பிள்ளை சீமந்தம் நடந்ததே, ஞாபகம் இருக்கிறதா? நீங்களும் வந்திருந்தேளே. அங்கே, சமையல் உள்ளே திடும்னு இந்தம்மா வந்து நின்றாள். எனக்கு வெலவெலத்துப் போய் விட்டது. இந்தம்மா இங்கே எதற்கு வந்தா என்று யோசிக்கறச்சேயே ஞாபகம் வந்து விட்டது, நரசிம்மாச்சாரியோட பெரியம்மா பொண்ணுதான் இந்தம்மா என்று. குழம்புப் பாத்திரத்தைத் திறந்து பார்த்துவிட்டு— 'எதுக்கு இத்தனே ஜலம் விட்டிருக்கேள்? மேலே எப்படி தெளிஞ்சு நிக்கறது'ன்னு கத்தினாள். ரசத்தை இறக்கி வெச்சுட்டுத் தான் கொத்துமல்லி போடணும்னு ஒரு லெக்சர் அடித்தார்! தக்காளிப் பழத்தை ஏன் இத்தனே பெரிசாகத் துண்டு போட்டு இருக்கேள்? ஒருத்தர் இலேலே விழும். ஒருத்தர் இலேலே விழாது. எதுக்கு இந்தப் பாரபட்சம்? பொடிப் பொடியா நறுக்கிப் போட்டால் எல்லோருக்கும் சமமாக விழுமில்லேயான்னு கத்தினாங்க. அதுக்குள்ளே பாதுஷாவுக்கு வெச்ச பாகு முத்த ஆரம்பிச்சிடுத்து. ஜலம் விட்டுச் சரி பண்றேன்னு அந்தம்மா ஒத்துக்



கவே இல்லே. 'எதுக்காக நீர் கரண்டி பிடிக்கறீர்... செய்யற தொழிலேச் சரியா பண்ணனும்... சினிமாக்காரி மூஞ்சியில போட்ட பவுடர் மாதிரி சர்க்கரை பூத்துண்டு நிக்கும்னு' கத்தினங்க. அதேமாதிரி பரிமாறுகிற போதும், வேஸ்ட் பண்ணக் கூடாதுன்னு...' நிமிஷத்துக்கு ஒருதரம் சொல்லிட்டுப் போவாங்க. அம்மாடி... அந்தம்மா எதிரிலே நிக்கறன்னலே கைகால் அசைய மாட்டேங்கறது... அதனலதான் வேணுவை அனுப்பிடறேன்றேன்..."

"அதெல்லாம் வேண்டாம்... எல்லாம் நல்லபடி நடக்கும். நீங்களே வந்துவிடுங்கள். எனக்கு இருக்கிறதே ஒரே பொண். அவள் கல்யாணத்தில் எந்தக் குறையும் இருக்கக் கூடாது. சாப்பாட்டு மெனுவை — முதல் நாள் ஜானவாசத்திலிருந்து கல்யாணத்துக்கு மறுநாள் சம்பந்தி விருந்துவரை — முழுசும் போட்டுக் குடுத்துடுங்கோ. அந்தம்மாகிட்டே காண்பிச்சு அப்ரூவல் வாங்கிடறேன், சரியா..."

"சரி... உங்க இஷ்டம்... எல்லாம் நல்லபடியாக நடந்தால் சந்தோஷம். நாளேக்கு காலேயில் லிஸ்ட் கொண்டு வந்து குடுத்துடறேன். வரட்டுமா... வரம்மா..."

**வே**ம்பு ஐயர் போன பிறகு ராஜி மெது வாய் முனகினள்: "இத்தனே பயமுறுத்துகிறரே வேம்பு ஐயர் சம்பந்தி அம்மாவைப் பற்றி. நம்ம நளினி என்ன பாடுபடுமோ அங்கே போயி... இன்னும் இரண்டு அயிட்டங்கள் சரியாகப் பண்ணத் தெரியலே. கத்துக்கோடின்னு முட்டிண்டாலும் காதுலயே போட்டுக்கிறது இல்லே. என்ன பண்றது இப்போ...?"

ராஜியின் பயம் முற்றிலும் சரியானதுதான். காலேயில் காலேஜ், மாலேயில் நடனம், பாட்டு, கிளப், என்று வளர்ந்துவிட்ட அவர்களின் ஒரே பெண்ணுக்குச் சமையலில் நாட்டமே இருந்ததில்லே. சாப்பிடும் போதும், கையில் ஒரு புத்தகத்துடன், தட்டிலிருப்பது தெரியாமல், ருசி உணராமல், பாதிச் சாப்பாட்டில், சட்டென்று ஞானேதயம் வந்தவளாய் —

"எதுக்கும்மா இத்தனே போட்டிருக்கே... எத்தனே நாழி சாப்பிட்டாலும் முடியவே மாட்டேன்றது..." என்று ராஜியிடம் குரல் கொடுத்துவிட்டு நிர்தாட்சண்யமாய் எழுந்து விடுவாள்.

மீந்து போன உணவைப் பார்த்து ராஜி கத்துவாள்.

"நான் போடச்சே ஏண்டி பேசாமல் இருந்தே? எப்பப்பாரு கையில் ஒரு புத்தகம், நெய்யும், பாலும் கொட்டி செஞ்சா, தட்டுல, இப்படி எறிஞ்சுக்கிட்டுப் போனல் என்னடி அர்த்தம்? உன் வயத்துக்கு எவ்வளவு வேணும்கிறது கூடவா உனக்குத் தெரியாது. போ. புக்ககத்துக்குப் போய் வாங்கிக் கட்டிப்பே. போ. உன்னே மட்டும் தூஷிக்கிறதோட நிற்கப் போறதில்லே. என் மண்டையையும் உருட்டுவார்கள். வளர்த்திருக்காளே பொண்ணேத் திவ்யான்னு..." என்னும் ராஜியின் குரலேக் கேட்க நளினி அங்கு இருந்ததில்லே. அவளுக்கு வரப் போகும் மாமியார் சரியான சாப்பாட்டு ராமியாமே. சமையலில் எக்ஸ்பர்ட்டாமே. மீதம் வைத்தால் கோபிப்பாளாமே. நளினி ...ன்ன செய்வாள்?' அன்றிலிருந்து நளினிக்குச் சமையலறையிலும், சரியாகச் சாப்பிடவும் நிறைய ப்ராக்டீஸ் கொடுக்கப்பட்டது.

**க**ல்யாணம் ஒரு குறையுமில்லாமல் நடந்தது. சமையல் எதிர்பார்த்ததற்கு மேலேயே ஜோராராக அமைந்துவிட்ட போதிலும் பாதாம் கீரில் கேசரிப் பௌடர் அதிகம் என்று ஓர் இழுப்பு இழுத்து விட்டுத்தான் போனள் சம்பந்தி மாமி.

ஒவ்வொருவருக்கும் விழுந்து விழுந்து உபசரித்தாள் மாமி. சின்னக் குழந்தைகளுக்குச் சாதத்தைத் தானே பிசைந்து வைத்தாள். இளவட்டங்களே விளுக்காமல், சங்கோஜப்படாமல் சாப்பிடச் சொன்னள். புன்சிரிப்பு மாருமல் எல்லோரையும் விசாரித்தாள்.

"இந்த மாமி சாப்பாடே குறியா இருக்கிறதால்தான் இத்தனே ஸ்தூலசரீரமா இருக்கா..." என்னும் கமெண்டுக்காகக் கடுகடுத்துக் கொள்ளவே இல்லே.

முகம் வாடியிருந்த ராஜியைப் பார்த்த சுந்தரத்திற்குத் திக்கென்றது. அவருடைய பதற்றத்தைப் புரிந்து கொண்ட ராஜி,

"ஒண்ணுமில்லே... ஒரே பசி... சம்பந்தியம்மா கூட சாப்பிடணும்னு காத்துண்டு இருக்கேன்... அந்தம்மா மாடியிலேயே இருக்காப் போல இருக்கு... கீழ வரலேயே..." என்றுள்.

அவளேப் பார்க்கப் பாவமாய் இருந்தது.

"வா... மேலே போய்ச் சாப்பிடக் கூப்பிடலாம்..."

"வாங்கோ... சாப்பிட்டாச்சா ரெண்டு

அவன் : உன் ஜோக் பிரமாதமா இருக்குடா. ஆனல் நீ ஏன் வருத்தமா இருக்கே?

இவன் : பின்னே, சிறுகதையா அனுப்பினேன்; அது ஜோக்கா வெளி வந்திருக்குன்னு வருத்தமா இருக்காதா?

— சரஸ்வதி பஞ்சு.



பேரும்... சமையல் பலே ஜோர். வேம்பு ஐயர்தான் சமையலுக்கு வேணும்னு இதுக்காகத்தான் சொன்னேன். இதோ பாருங்கோ. அவருக்கு ஸ்பெஷலா ஒரு ஜரிகை வேஷ்டி எடுத்து வெச்சு இருக்கேன். பிரசண்ட் பண்ணப் போறேன். ஒவ்வொருத்தர் முகத்திலேயும் தெரிஞ்ச அந்தத் திருப்தியைப் பார்த்தேளா...? அதைப் பார்த்துண்டே இருந்ததுல என் பசியெல்லாம் ஓடியே போயிடுத்து. பாத்தாங்கீர் சாப்பிட்டேளா? நன்னு இருந்ததோல்லியோ...? உங்க பக்கம் மனுஷாளுக்கெல்லாம் திருப்திதானே...?'' என்றாள் சம்பந்தி மாமி.

''ஓ... எல்லோருக்கும் பரம திருப்தி... நீங்க வரேளா...? நாம சாப்பிடலாம்...''

''என்னது...? நீங்க ரெண்டு பேரும் சாப்பிடலையா இன்னும்...? ஆறிப் போனா ருசியே போயிடும்.... ஏன் சாப்பிடலே நீங்க...?'' கொஞ்சம் கடுமையாகவே பேசினாள் மாமி.

''உங்களோட சாப்பிடணும்னு காத்துக் கொண்டிருக்கோம்...''

''எங்கூடவா...?''

மெல்லிய மௌனத்துக்குப் பின்,

''நான்தான் ஒரு மணிக்கொரு வாட்டி சாப்பிட்டுண்டு இருக்கேனே...?''

''எப்போ சாப்பிட்டேங்கோ...? நாங்கள் பார்க்கவே இல்லையே...?''

திடும் என்று வேகமாய் உள்ளே நுழைந்த மாப்பிள்ளை டாக்டர் சுரேஷ் — ''அம்மா ஒரு மணி நேரம் ஆச்சு. சாப்பிட்டாயா?, ஊசி போடட்டுமா? ரொம்ப அலையாதே. சமையல் ஏ. ஒன். துளிக்கூட மீத்தலே யாரும்...'' என்றான். அவன் கண்களில் லேசாய்த் திரையிட்டிருந்தது கண்ணீர்.

எதுவோ, விரும்பத்தகாத கனமாய் இருந்த அந்தச் சூழலை மீண்டும் தன் புன்சிரிப்பால் மாற்றினாள் சம்பந்தி மாமி.

''போங்க ரெண்டு பேரும். சூடு ஆறறதுக்குள்ளே சாப்பிடுங்கோ. எனக்கு இதோ இருக்கே இந்தக் கூஜாவில் கோதுமைக் கஞ்சி. அந்தப் பாட்டிலில் பாவக்காய் ஜூஸ். அதைத்தான் என் நினைவு தெரிஞ்ச நாள் முதலா சாப்பிட்டுண்டு வரேன். பிறக்கறச்சயே தீவிரமான டயாபடீஸுடன் பிறந்தேன். சின்னதுலேந்தே வாயைக் கட்டக் கத்துண்டுட்டேன்: என் சிநேகிதிங்க ஸ்வீட்டா சாப்பிடறச்சே நான் வேடிக்கை பார்ப்பேன். வாசனை பார்த்தே ருசியை அறியக் கத்துண்டேன். அதிலேயே ஒரு ஆத்மத் திருப்திப் படப் பழகிண்டேன். என்னை மாதிரி பிறக்கறவா அபூர்வம். என்னை மாதிரி இருக்கறவாளுக்குத்தான் சாப்பாட்டின் ருசியின் அருமையைப் பற்றித் தெரியும். நன்னா இருக்கற நீங்களெல்லாம் ருசியை அறிஞ்சு சாப்பிடணும்னுதான் கொஞ்சம் கண்டிப்பா இருப்பேன். அதுக்காக என்னைச் சாப்பாட்டு ராமின்னும் கேலி பண்ணுவா. அவர்களிலே நிறைய பேருக்கு நான் எதையும் சாப்பிடறது இல்லேன்னு தெரியாது. போங்கோ. ருசிச்சு நிதானமாச் சாப்பிடுங்கோ...''

நிஜமாகவே சமையல் ருசியாய் இருந்தாலும், மனத்தில் எத்தனை விலக்கியும் விலகாத ஒரு சோகம் அடைத்துக் கொண்டு, மேலும் உணவைச் சாப்பிட முடியாமல் செய்தது!


* நேரமில்லே


* சுறுசுறுப்பு

# தமிழக அமைச்சரவையில் சுறுசுறுப்பானவர் யார்?

* அருண், ஈரோடு.

? முதல் டெஸ்ட்டில் உங்களைக் கவர்ந்த பேட்ஸ்மன் யார்?

! 31வது டெஸ்ட் செஞ்சுரியில் மொத்தத்தில் 9000 ரன்களைப் பூர்த்தி செய்த கவாஸ்கரைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? இவரது இந்த உலக ரிகார்ட் முறியடிக்கப்படுவதை நமது கொள்ளுப் பேரன் பார்ப்பானு என்பதுகூடச் சந்தேகம். 110 மாட்ச்கள் ஆட வாய்ப்புக் கிட்டியதால்தானே எடுக்க முடிந்தது என்று கூறுகிறவர்கள் 110 மாட்ச் ஆடியதே சாதனை என்பதை மறக்கலாமா!

? அநியாயம், அக்கிரமம் என்ன வித்தியாசம்?

! ஆங்கிலத்தைக் கைவிடுவது அநியாயம்; ஹிந்தியைத் திணிப்பது அக்கிரமம்!

* அ. சிவாராவணன், விருத்தாசலம் *

? முன்பிருந்ததுபோல் மக்கள் தங்களது குறையை மன்னரிடம் தெரிவிக்க மணியடிக்க வேண்டும் என்றொரு சட்டம் வந்து ஒவ்வொரு ஊரிலும் அதற்கென மணிகள் நிறுவப்பட்டால்....?

! அந்த மணிகளைத் தயாரிக்க காண்ட்ராக்டர ஆட்சியில் உள்ள அரசியல்வாதிகள் ப்ரீப் கேஸை எதிர்பார்ப்பார்கள். காண்ட்ராக்டர்களின் பில்லைப் பாஸ் பண்ண அதிகாரிகள் காகித உறையை எதிர்பார்ப்பார்கள்; அந்த மணியை அடிக்க அனுமதிக்க அரசு ஊழியர்கள் சம்திங் எதிர்பார்ப்பார்கள்; இவ்வளவுக்குப் பிறகும் மணியைத் துணிந்து குடிமகன் அடித்தால், பதவியில் உள்ளவர்கள் 'காதில் விழவில்லை' என்பார்கள்!

* சி. கணேஷ், பெரியகுளம்.

? தமிழக அமைச்சரவையில் சுறுசுறுப்பானவர்?

! வி.வி. சுவாமிநாதன்தான். சிந்து பைரவி படம் பார்த்த சூட்டோடு டைரக்டர் பாலசந்தருக்குப் பாராட்டுக் கடிதம் எழுதியிருக்கிறாரே. அந்த வேகத்தை அவர் சம்பந்தப்பட்ட கோப்புகளிலும் காட்டினால் சரி.

* லிலா ராம், தக்கலே.

? மெரீனு பீச்சில் கடைசியாக எப்போது காற்று வாங்கின ஞாபகம்?

! ஏன், மிக சமீபத்தில் கூட சென்னை பல்கலைக் கழகத்தில் அமரர் கல்கி நினைவுச் சொற்பொழிவுக்குக் கால்மணி நேரம் முன்னதாகப் போய்விட்டதால் பீச்சில் உலாவிக் கொண்டுதான் இருந்தேன். நான், 'மெரீனு பீச் வாக்கர்ஸ் அஸோஸியேஷ'னைச் சேர்ந்த பெரும் புள்ளியா என்ன, மீனவர் கலவரத்துக்குப் பிறகு அங்கு நடமாடவே அஞ்சுவதற்கு!

* பி. எல். பரமசிவம், மதுரை.

? இறந்த மீனவர்கள் சடலங்கள் மீது மலர் வளையம் வைக்க வந்த நாடாளுமன்ற உறுப்பினர் வைஜயந்திமாலாவை விரட்டி அடித்தது மட்டுமல்லாமல் அவர் கார் மீது செருப்பையும் வீசினுர்களாமே மீனவர்கள்! அதைக் கண்டிப்பீர்களா?

! என்னதான் உணர்ச்சிவசப்பட்டிருந்தாலும், 'உங்கள் அனுதாபம் எங்களுக்குத் தேவையில்லே' என்று சொல்லி அனுப்பியிருக்கலாம்; எல்லே மீறிவிட்டார்கள். கண்டனத்துக்குரியதுதான். அதேநேரத்தில், தன் தொகுதி மக்களான மீனவர் நலன் பற்றி காலதாமதமான விழிப்புணர்ச்சி பெற்று அரசியல் ஆதாயம் தேட ஓடோடி வந்த வைஜயந்திமாலாவின் நாட்டிய நாடகமும் கண்டனத்துக்குரியதே!

* எஸ். சிவானந்தம், கரூர்.

? நடு ரோட்டில் வாகனங்கள் மீது அமர்ந்தபடியே கோயில் சாமியைப் பார்த்துக் கன்னத்தில் போட்டுக் கொள்ளும் தெய்வ முற்போக்குவாதிகளைப் பற்றி...?

! இவர்களில் இரண்டு ரகம் உண்டு. பஸ் அல்லது ரயிலில் சென்று கொண்டிருப்போம். தூரத்தில் கோபுரம் தெரியும். தெய்வ சிந்தனை தோன்றும். அங்கு நாம் போவது சாத்தியமில்லே. இங்கிருந்தவாறே கன்னத்தில் போட்டுக் கொள்கிறோம். இது சரி. கோபுரங்கள் இதற்காகவே ஏற்பட்டவை. இன்னொரு ரகம் உண்டு. ஸ்கூட்டர் அல்லது காரை கோயில் வாசலில் கொண்டு வந்து


* தனிப்பட்ட வெற்றி


* தடுமாற்றம்


* கண்டனம்*


* நல்லுறவு


* சாதனை வீரர்

நிறுத்திக் கொள்வார்கள். அங்கிருந்து சந்நிதி தெரியும். கன்னத்தில் போட்டுக் கொண்டு அவசரம்அவசரமாகக்கிளம்பிவிடுவார்கள்! ஏன், ஐந்து நிமிஷம் முன்னதாக வந்து இறங்கிக் கும்பிட்டுச் சென்றால் என்னவாம்? இவர்களை அந்தத் தெய்வம்தான் மன்னிக்க வேண்டும். நம்மால் முடியாது!

*** எச். கே. நாசர், தோப்புத்துறை.**

**? என். டி. ஆரின் பாரத தேசம் என்ன ஆயிற்று?**

! தெலுங்கு தேசத்தைக் காப்பாற்றிக் கொண்டாலே போதும் போதும் என்றாகி விட்ட நிலையில் பாரத தேசம் பற்றி எண்ணிப் பார்க்க என். டி. ஆருக்கு ஏது நேரம்.

*** சீனு—சங்கர், திருப்புன்கூர்.**

**? ஆசிரியர் பிரச்னை தீர, பள்ளிகளை ஒரு வருஷத்துக்கு இழுத்து மூடுங்கள் என்று பக்தவத்சலம் சொல்லியிருக்கிறாரே? முந்நாள் முதல்வர் இப்படி பேசலாமா?**

! சாதாரணமாக சரியான கணிப்பை அவரிடம் எதிர்பார்க்க முடியும். இப்போது தடுமாறிவிட்டதானது அவரது வயது காரணமாக, அனுதாபத்தையே உருவாக்குகிறது.

*** வி. ரமேஷ், பெங்களூர்.**

**? கிர்லோஸ்கர் போன்ற பெரிய புள்ளிகளை கைது செய்யப்பட்டிருப்பது ராஜீவ் உண்மையிலேயே வரி ஏய்ப்பவர்களை அடக்க முயற்சி செய்கிறார் என்பதைத்தானே காட்டுகிறது?**

! நிச்சயமாக. வரிச் சலுகைகள் என்ற காரட்டையும் குதிரை முன்னால் தொங்க விட்டு ஆசை காட்டுகிறார்; கடுமையான நடவடிக்கை என்ற சாட்டையையும் சொடுக்குகிறார். இரண்டும் தேவையே. அவர் இன்னமும் சுத்தமாக இருப்பதாலேயே இந்த தார்மீகபலத்தைப்பெற்றுள்ளார்என்றேதோன்றுகிறது. அந்நியச் செலாவணி ஊழலுக்காக கிர்லோஸ்கர் கைது என்று செய்தி வெளியான அதே நாளிதழில், எக்ஸைஸ் வரி ஏய்ப்புக்காக ஃபெட்டர் லாயிட் மீது நடவடிக்கை, விஷவாயு ஒழுகியதற்காக ஸ்ரீராம் ஃபாக்டரி மீது நடவடிக்கை, பம்பாய் திரைப்படத் துறை பெரும் புள்ளிகள் இல்லங்களில் சோதனை நடத்தி 71 லட்சம் கறுப்புப் பண மீட்பு ஆகிய அனைத்துச் செய்திகளும் வெளியாகியுள்ளன.

*** இரா. ரெங்கசாமி, உசிலம்பட்டி.**

**? உள்நாட்டுப் பிரச்னை, வெளிநாட்டுப் பிரச்னை இரண்டில் முதலிடம் பெற வேண்டியது எது?**

! இரண்டும் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவே. உதாரணமாக, இப்போது பாகிஸ்தானுடன் நல்லிணக்கம் ஏற்பட வெகுவாகப் பாடுபட்டு வருகிறார் ராஜீவ். இரு நாடுகளிடையே நட்புறவு வளர்ந்தால் இரு தேசங்களுமே ராணுவச் செலவுகளைக் கட்டுப்படுத்தி அதை அபிவிருத்தித் திட்டங்களுக்குச் செலவழிக்கலாம் அல்லவா? படையெடுப்பு பற்றி கவலையின்றி ஆக்கபூர்வமான காரியங்களில் இறங்கலாமில்லையா?

*** த. சத்தியநாராயணன், அயன்புரம்.**

**? செய்யாறு இடைத் தேர்தல் முடிவு குறித்து...?**

! அது எம்.ஜி. ஆரின் தனிப்பட்ட வெற்றி. அவரது பிரபை சற்றும் மங்கவில்லை. மேலும் சத்துணவுத் திட்டமும், தேர்தலுக்கு முற்பட்ட திடீர் சலுகைகளும், அரசு யந்திரமும், பண பலமும் உதவியுள்ளன.

---

**ரூ 10 பரிசு பெறுபவர்:**

அ. சிவா ராவணன்,
சிவா இல்லம்,
கடலூர் சாலை,
விருத்தாசலம்—606 001.

---



ஸீரியஸான பதில்களுக்கு நடுவே, 'காப்பியங்கள் ஏன் படைக்கப்படுவதில்லை?' என்ற கேள்விக்கு, பல நாவல்களே 'காப்பி' யங்களாகத்தானே இருக்கின்றன என்ற தராசின் பதில் என்னை மனம் விட்டுச் சிரிக்க வைத்தது.

பழனி, ஆர். ஜி. சிவக்குமார்.

**மை'க்குப் பதில் துணிச்சல்!**

'மீனவ நண்பனா? விரோதியா?' என்ற தலைப்பில் தலையங்கம் கண்டேன்: உங்கள் பேனாவில் 'இங்க்'கிற்குப் பதிலாக நேர்மையையும், துணிச்சலையும் நிரப்பிக்கொண்டு எழுதியுள்ளீர்கள். பாராட்டுக்கள்.

ஸ்ரீரங்கம், சௌ. ராஜேஷ்.

அன்றாடம் ஒரு புதிய பிரச்னையை உருவாக்கி மக்களின் மனத்தில் சலிப்பை ஏற்படுத்தி வரும் தமிழக அரசுக்கு "மீனவ நண்பனா? விரோதியா?" தலையங்கம் மூலம் உருப்படியான அறிவுரைகளைத் தந்த விதம் சிறப்பாக இருந்தது.

கும்பகோணம்—1. பா. கிருஷ்ணதாஸ்.

**சாதனை இதழ்**

நமது புராதனமான பரதக்கலையை அயல்நாட்டில் பரப்பிய அலர்மேல் வள்ளியின் கவர் ஸ்டோரி, தேசிய விளையாட்டுப் போட்டியில் பளுதூக்கிய தமிழக வீரர்களின் சாதனை, கல்பாக்கம் விஞ்ஞானிகளின் உலகளாவிய சாதனை அனைத்தும் சேர்ந்த இந்த இதழைச் சாதனை இதழாக உருவாக்கித் தந்திருக்கும் 'கல்கி'யைப் பாராட்டி மாளாது.

குடியாத்தம்—2. கே. வி. எஸ். மணியன்.

**ஒளி வீசும் மணி!**

அலர்மேல் வள்ளியைப் போன்ற கலைஞர்களால் இந்தியாவின் பெருமை நிலைநிறுத்தப்படுகிறது. அத்தகைய ஒளிவீசும் மாணிக்கங்களை 'கல்கி'தான் வெளிச்சத்தில் கொண்டு வருவதில் முன்னணியில் நிற்கிறது!

மயிலாடுதுறை, இரா. 'பழம்.

**கல்கிக்கே உரிய பாணி**

செய்யாறு இடைத் தேர்தல் முடிவு எப்படி இருக்க வேண்டும் என்று 'தராசு' கூறியதும், எப்படி இருக்கும் என்று உங்களது நிருபர்கள் சிறப்புக் கட்டுரையில் கூறியதும் கல்கிக்கே உரிய அங்கதப் பாணியன்றோ!

இளங்கார்குடி. கோ. பாஸ்கர்.



# தராசுக்கு 'ஜோக்' அடிக்கத் தெரியுதே!

**எளிமை, அருமை!**

இன்றைய (15.12.1985) இதழில் வெளியான கல்பாக்கம் பற்றிய கட்டுரைக்கு என் மனப்பூர்வமான பாராட்டுக்கள். இருபது வருடங்கள் விஞ்ஞானம் போதித்த கல்லூரி ஆசிரியன் என்ற முறையில் சொல்கிறேன்: விஞ்ஞான உண்மைகளை 'உரித்த வாழைப் பழமாக' எளிமைப்படுத்தி விளக்கிய முறை மிக அருமை. 'நமது நிருபர்கள்' இதுபோன்ற விஞ்ஞான விஷயங்களை மேன்மேலும் வழங்க வேண்டுகிறேன்.

தஞ்சாவூர், சி. கண்ணன்.

கல்பாக்கம் அணுமின் நிலையம் உலகமே வியக்கும் அளவிற்குச் சாதனை புரிந்திருப்பதைப் பெருமையுடன் படித்தபோது இந்த அற்புத, அபார சாதனையை விடாமுயற்சியோடு செய்து முடித்த நம் இளம் விஞ்ஞானிகளை அப்படியே கட்டிப்பிடித்து முத்தம் கொடுக்க வேண்டும்போல் இருந்தது.

நெல்லிக்குப்பம், எஸ். ஜே. சலீம் தமீஜுதீன்.

**மாயாஜாலம் செய்தீரோ?**

'ஓர் உதயத்தின் அஸ்தமனம்' (வேறேதோ பத்திரிகையில் இதே தலைப்பைப் பார்த்த ஞாபகம்!) கதை விறுவிறுப்பு! அதுசரி சார், கதையில் மௌலி வைத்திருந்த துணிப்பை, ஓவியத்தில் பெட்டியாக மாற என்ன மாயாஜாலம் செய்தீர்கள்?

பெங்களூர்—18. கே. கணேசமூர்த்தி.

**பயமுறுத்திய அனுபவங்கள்**

'கோயிலுக்குச் சென்றபோது...'—வாசகர் அனுபவங்களைப் படித்த பிறகாவது, போகாத சிலர் கோயிலுக்குப் போவார்கள் என்று பார்த்தால், போகும் சிலரையும் பயமுறுத்துகின்றனவே சில அனுபவங்கள்!

சென்னை—14. ஐயாறு எஸ். வாசுதேவன்.

**ஆயிரம் சுமைகள்**

'இறங்கும் வரை' ஒரு பக்கக் கதையாறாலும், கதையின் முடிவில், மனத்தில் ஆயிரம் சுமைகளை ஏற்றி வைத்துவிட்டது!

ஒண்டிப்புதூர். எஸ். வேலாயுதசாமி

# ஹஹ ஹஹ ஹா... ஹஹ ஹஹ ஹா...!

"பொது மக்களே! என் உடன் பிறப்புகளே! நான் லஞ்சம் வாங்குவதாகக் குற்றம் சாட்டுகிறார்கள். அதை மட்டும் அவர்கள் நிரூபித்தால் நான் இப்போதே, இந்த நிமிடமே லஞ்சம் வாங்குவதை விட்டு விடுகிறேன் என்று சவால் விடுகிறேன்!"

— லலிதா அய்யர்.



"நான் விடும் குறட்டைச் சத்தத்தில் என் தூக்கமே கலைகிறது டாக்டர்! என்ன செய்வது?"

"குறட்டைச் சத்தம் ஆரம்பிச்சதும் அடுத்த ரூமில் போய்ப் படுத்துக் கோங்க!"

— சம்பத்குமாரி.






யாரேனும் தவறாக பேசினால் கண்டிக்க முடியுமானால் உடனே கண்டித்துவிடு. கண்டிக்க முடியாதவர்களாய் இருந்தால் உன் மௌனத்தால் அதிருப்தியை வெளிக் காட்டி விடு.

— எபிக்டெட்டுஸ்

— எஸ். முகம்மது யூசுப்



'நான் பொய் சொல்லுகிறேன்' என்கிற சாதாரண வாக்கியத்தில் உள்ள முரண்பாட்டைப் பாருங்கள். 'நான் பொய் சொல்லுகிறேன்' என்பது உண்மையானால் நான் சொன்னது பொய்; அதாவது 'நான் பொய் சொல்கிறேன்' என்றது பொய். அப்படியானால் நான் நிஜம் சொல்லுகிறேன்!

— நீர்க்குமிழிகள் என்ற நூலில்: சுஜாதா.

தகவல்: எஸ். முகம்மது யூசுப்.

# புதிய பார்வைக்குப் பரிசு

'திறனாய்வு' என்கிற தமிழ்ச் சொல்லை முதன்முதலாக அறிமுகப்படுத்தியவரே பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள் தான். 'திறனும், ஆய்வாம்' என்று கிண்டல் பண்ணிய ஒரு பிரபல பத்திரிகையின் ஆசிரியரே, இவரைப் பின்னால் இலக்கியக் கட்டுரைகள் எழுதுமாறு பெருந்தன்மையுடன் கேட்டுக் கொண்டாராம்!

ஆங்கில இலக்கியத் துறையில் 'லிட்ரரி க்ரிடிஸிஸம்' என்னும் விமரிசனக் கலை அபரிதமாக வளர்ந்துள்ளது. தமிழில், பச்சையப்பன் கல்லூரியில், 1944 ஆம் ஆண்டில் இந்தப் படிப்பை எம்.ஏ. வகுப்பில் புகுத்த வேண்டும் என்று முடிவு செய்தபோது, "நீதான் இந்தத் துறையைக் கவனித்துக் கொள்ள வேண்டும்" என்று அ.ச. ஞானசம்பந்தம் அவர்களுக்குக் கட்டளையிட்டவர் பேராசிரியர் மோசூர் கந்தசாமி முதலியார்.

திரு அ.ச. ஞானசம்பந்தம் ஏ.வி.எம். அறக்கட்டளையின் சார்பில் இரண்டு நாட்கள் நிகழ்த்திய சொற்பொழிவை சென்னைக் கம்பன் கழகம் நூலாக வெளியிட்டது. இந்தத் திறனாய்வு நூல் இந்த ஆண்டு சாகித்ய அகாதமி பரிசு பெற்றிருக்கிறது. "கம்பன்—புதிய பார்வை" என்ற இந்த நூல் முழுவதையும் இருபத்திரண்டே நாட்களில் எழுதியிருக்கிறார் பேராசிரியர் அ.ச.ஞா!

சில ஆண்டுகளுக்கு முன்னால் 'திரு.வி.க.' என்ற தலைப்பில் கல்கி நினைவு அறக்கட்டளைச்



சொற்பொழிவாற்றிய இந்தப் பேராசிரியர் எழுதியுள்ள நூல்களில் பதினாறு பதிப்புக்கள் வெளியான நூல்: 'இலக்கியக் கலை.' தவிர, 'தம்பியர் இருவர்'; 'அரசியர் மூவர்'; 'நாடும் மன்னனும்' என்று மூன்று கோணங்களில் இவர் எழுதியுள்ள கம்பராமாயணக் கட்டுரைகள் மிகவும் புகழ் பெற்றவை.

"வாரப் பத்திரிகைக்கு எழுதுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டபோது, சாதாரண மக்களுக்கும், குடும்பப் பெண்களுக்கும் புரிகிற மாதிரி இலக்கியக் கட்டுரைகளை எழுத முடியுமா என்று நான் தயங்கியதுண்டு. 'நிச்சயமாக உங்களால் முடியும். எனக்குப் புரிகிற மாதிரி எழுதுங்கள். தானே மக்களைச் சென்று அடையும்' என்று அடக்கத்தோடு சொல்லி ஊக்கப்படுத்தினார் திரு வாசன்" என்று நன்றியுடன் நினைவுகூர்கிறார் அ.ச.ஞா.

ஒரு நண்பர் கேட்டார், "பரிசு பெற்ற இந்த நூலை எழுதுவதில் உங்கள் பங்கு என்ன?" என்று.

"பத்து பால்பாயிண்ட் பேனாக்களும், வெள்ளைக் காகிதமும் என்ற செலவு வகையில் அறுபது ரூபாய்தான். மற்றபடி நூலை நான் எங்கே எழுதினேன்? ஏதோ ஓர் ஆற்றல் என்னை எழுத உந்தியது" என்றார் அ.ச.ஞா.

இப்போது தஞ்சைப் பல்கலைக்கழகத்துக்காகப் 'பெரியபுராண ஆராய்ச்சி' என்கிற விரிவான நூலை எழுதி வருகிறார் அ.ச.ஞா.

**(கம்பன் புதிய பார்வை—விற்பனை உரிமை:**

**வானதி பதிப்பகம், சென்னை—17.**

**புதிய பதிப்பு விரைவில் வெளிவரப் போகிறது.)**

**—சுப்ர. பாலன்**



• பாபா, தொழுநோயாளி — அங்கஹீனமான பெண்ணுடன்.

# ஒரு காந்தீயக் கனவை நனவாக்க..!

'என் ஆத்மாவைத் தேடினேன்; ஆனால் அதைப் பார்க்க இயலவில்லை.
என் இறைவனைத் தேடினேன்; அவனும் என்னைத் தவிர்த்தான்.
என் சகோதரனைத் தேடினேன்: அவனுள் தேடிய 'மூன்றை'யும்
கண்டேன்.'

செல்வச் செழுமையுள்ள அந்தணக் குடும்பத்தில் பிறந்தாலும், தாழ்த்தப்பட்ட மக்களுடன் பழகி, ஒன்றாக உணவருந்தி அவர்களுள் ஒருவனாகத் தன்னை இணைத்துக் கொண்டான் அந்தச் சிறுவன்.

இளமைப் பருவத்தில், 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தில் சேர்ந்து சிறை வாசம் செய்த அவன், ஒருமுறை பிரிட்டிஷ் போலீஸுடன் தன்னந்தனியே நேருக்கு நேர் போராடியதினால், காந்திஜியால் 'தைரியத்தைத் தேடுபவன்' என்று பாராட்டப் பெற்றவன்.

1948ல் தனது வழக்கறிஞர் பட்டத்தைக் கிழித்து எறிந்துவிட்டு, குடும்பச் சொத்தில் தனது பங்கையும் வேண்டாம் என்று உதறி விட்டுக் கிளம்பினான்.

எங்கே.....?

ஒருகாந்தியக்கனவைநனவாக்க — தொழு நோயாளிகளுக்கும் அநாதைகளுக்கும் அங்கஹீனமானவர்களுக்கும் நம்பிக்கை ஒளிக் கீற்றைக் காட்டினான்.

முரளீதர் தேவிதாஸ் அம்தே என்ற பெயர் கொண்ட அந்த இளைஞனின் இன்றைய பெயர் பாபா அம்தே. ஆம்! எழுபத்தொரு வயதான இந்த பாபா அம்தேவுக்குத்தான் இந்த ஆண்டு மக்ஸேஸே விருது கிடைத்துள்ளது.

சமூக வாழ்க்கையிலிருந்து ஒதுக்கப்பட்ட தொழு நோயாளிகளுக்கு உதவ வேண்டும் என்றுதோன்றியதும், 'தொழுநோய்தொற்று நோயா? அதற்குச் சிகிச்சை உண்டா?' என்றெல்லாம் தெரிந்து கொள்ள, கல்கத்தா ஸ்கூல் ஆஃப் டிராபிகல் டிஸீஸ்'ஸில் சேர்ந்து, தொழுநோய் பற்றிய முழு விவரங்களையும் விரிவாகத் தெரிந்து கொண்டார்.

அதன் விளைவு?

1951ல் வெறும் பதினான்கு ரூபாய், 25 ஏக்கர் வறண்ட நிலப்பரப்பு, ஒரு பசு ஆகியவற்றோடும் ஆறு தொழு நோயாளிகளுடனும் வரோராவில் 'ஆனந்த்வன்' — ஆனந்தத் தோட்டம் — உருவானது.

ஆனந்தவன்னில் ஒருபுறம் கைத்தொழில்கள், மர இரும்பு வேலை மும்முரம், மறுபுறம் வீடு கட்டும் பணி என்று ஓயாமல் நடக்கிறது! இன்று பல தொழு நோயாளிகள் பிச்சை எடுத்துப் பிழைக்கும் நிலையில், நூற்றுக் கணக்கான தொழு நோயாளிகள் அம்தே அவர்களால் குணப்படுத்தப்பட்டு, கௌரவமாகத் தொழில் செய்து வாழ்கின்றனர். இவர்கள், முன்னாள் தொழு நோயாளிகள் என்றால் நம்பவே முடியாது.

தொழு நோயாளிகளைத் தொடர்ந்து, பார்க்க, கேட்க, பேச இயலாதவர்களும் அம்தேயின் அரவணைப்பில் ஆதரவு மழையில் நனைந்தார்கள்: அவர்களுக்காக சாந்தி நிகேதன் இல்லம் உருவானது. அங்கே அவர்களுக்குக் கல்வியும், தொழில்களும் கற்றுத் தரப்படுகின்றன. அநாதைக் குழந்தைகளுக்காகக் 'கோகுல்' என்ற இல்லமும் நடக்கிறது.

அம்தேயின் இரண்டு மகன்களும் டாக்டர்கள். விகாஸ், பிரகாஷ். இருவரும் தந்தை வழியில் துயர் துடைக்கும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

தொழு நோய்ச் சிகிச்சைக்காக 'சோம்னாத்', 'அஷோக் வன்' ஆகிய நிலையங்களை அடுத்தடுத்த பகுதியில் அம்தே உருவாக்க, அவை இப்போது கிராமமாக மாறியிருக்கின்றன. 'சோம்னாத்', சந்திராபூர் காடுகளிடையே



• பாபா அம்தே; அவர் மனைவி சதானதை.

உள்ளது. கல்வி அறிவு சிறிதும் இல்லாத தொழு நோயாளிகள் சிறு அணை ஒன்றை அவர்களாகவே கட்டி, நீரைச் சேமித்து, விளைச்சலைப் பெருக்கித் தன்னிறைவு பெற்ற கிராமமாக ஆக்கிக் கொண்டிருக்கின்றனர்.

ஆரம்ப காலத்தில் ஒதுக்கப்பட்ட இடமாகக் கருதப்பட்ட 'ஆனந்த்வன்'னில் தற்சமயம் வேளாண்மைக் கல்லூரி, கலைக் கல்லூரி ஒன்றும் உள்ளது. மஹாராஷ்டிரா மாநிலத்தின் பல பாகங்களிலிருந்தும் மாணவர்கள் படிக்கிறார்கள். கல்லூரிகளின் கட்டிடங்களைக் கட்டியது யாரென்று நினைக்கிறீர்கள்...? அம்தேயின் உடன் பிறவா சகோதரர்களான முன்னாள் தொழு நோயாளிகள்தான்.

தீவிர முதுகு வலி காரணமாக இப்போது அம்தேயால் உட்கார முடியாது. ஒன்று நிற்க வேண்டும்; அல்லது படுக்கையில் கிடக்க வேண்டும். உணவை நின்று கொண்டுதான் சாப்பிடுகிறார். நடப்பதில், அது எத்தனை தூரமானாலும் சரி, பிரச்னை இல்லை. இந்த நிலையிலும், தற்சமயம் காஷ்மீர் முதல் கன்யாகுமரி வரை 'ஐக்கிய இந்தியா' பாதயாத்திரை நடத்தும்நடவடிக்கைகளில்பாபா ஈடுபட்டுள்ளார்.

'என் ஆத்மாவைத் தேடினேன்; ஆனால்
அதைப் பார்க்க இயலவில்லை.
என் இறைவனைத் தேடினேன்; அவனும்
என்னைத் தவிர்த்தான்
என் சகோதரனைத் தேடினேன்; அவனுள்
தேடிய 'மூன்றை'யும் கண்டேன்.'

ஆனந்த்வன் மருத்துவமனையில் எழுதப்பட்டிருக்கும் இந்த வரிகளை, அம்தே பற்றிய அறிமுகமாகவே எடுத்துக் கொள்ளலாம்.

— பிஸ்மி

படம்: ஓ வீக்

# "கவிதையைவிட உரைநடையில் சிறந்த கவிஞர்"



ஒவ்வொரு பாரதி விழாவிலும் நாமக்கல் கவிஞர் பற்றித் தவறாமல் குறிப்பிட்டுப் பேசுவார் ம.பொ.சி. அவர் சொல்கின்றகருத்து இதுதான்: "மகாகவிபாரதியார் காந்திய சகாப்தத்தின் தொடக்கத்திலேயே மறைந்துவிட்டார். அதனால்தான் திலகரைப் பற்றியும் கோகலேயைப் பற்றியும் நிறையப் பாடிய அவரால் காந்தி மகாத்மாவைப் பற்றி அதிகமாகப் பாட முடியாது போயிற்று. காந்திய சகாப்தத்தில் எழுச்சி மிக்க பாடல்களை பாரதி பாட முடியாமல்போன குறையை இட்டு நிரப்பியவர் நாமக்கல் கவிஞர்." இதனைச் சொன்ன கையோடு நாமக்கல் கவிஞரின் "கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது" பாடலின் சில வரிகளையேனும்பாடிக்காட்டுவார் ம.பொ.சி. அந்தப் பாடல் எப்படி ஒரு 'மார்ச் ஸாங்' ஆகத் தொலைதூரம் நடந்த வேதாரண்யம் உப்பு சத்யாகிரக வீரர்களுக்கும் மற்றும் பல ஊர்வலங்களில் தேசியப் போராட்ட வீரர்களுக்கும் பயன்பட்டது என்பதை எடுத்துக் காட்டுவார்.

"நாமக்கல் ராமலிங்கம் பிள்ளையின் 'கவிதைப் படைப்புக்களில் முக்கியமானதாகச் சொல்லப்படும் 'அவளும் அவனும்' நூலில் உள்ள கவிதைகளுக்கு விளக்கம் ஏதும் தேவையில்லை. அத்தனை தெளிவாக அமைந்துள்ளன. காப்பியத்துக்கான அளவு நிலையோடு சிறுசிறு 'பொடிகளை' இதில் வைத்திருக்கிறார் கவிஞர்.

"கவிஞரின் கவிதைப் படைப்புக்களை மேலோட்டமாகக் கணித்துச் சொல்லும் போது அவருக்குப் பழைய இலக்கியங்களில் அத்தனைத் தோய்வு இருந்ததாக எண்ண முடியவில்லை" என்றார் கா. மீ. "மேலும் கவிதைகள் சிலவற்றில் குறிப்பிட்ட கால கட்டத்துக்கான கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார். அவை 'கருத்தேற்றக் கவிதைகள்' என்று அழைக்கப்படுகின்றன. ஆனால் அவற்றுக்கு இன்றைய சூழலில் வலு இல்லாமல் போகின்றது" என்று கா. மீ. கூறியதை முற்றிலும் மறுக்க முடியாதென்றாலும் 'கள் ஒழிப்பு' போன்ற சில கவிதைகள் முன்னிலும் அதிகமாக இன்று முக்கியத்துவம் உடையனவாகத்தான் உள்ளன. காரணம் அன்றைய விடுதலைப் போராட்ட வீரர்களின் லட்சியங்கள் பலவற்றை இன்றைய ஆட்சியாளர்கள் காற்றில் பறக்கவிட்டு விட்டதுதான்!

"நாமக்கல்லாரின் பாடல்களில் கற்பனை குறைவு; ஆனால் உணர்ச்சி பூர்வமாக இருக்கும். ஏனெனில் அவர் அன்றைய லட்சியங்களுக்காக எழுதினார்; பொழுது போக்குக்

அத்தகைய தேசியக் கவியும் நாவலாசிரியரும் ஆய்வாளருமான நாமக்கல் கவிஞர் பற்றி இந்த ஆண்டு கல்கி நினைவுச் சொற்பொழிவை சென்னைப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்தினார் பேராசிரியர் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரனார். இந்திய தேசிய காங்கிரஸ் நூற்றாண்டு விழா கொண்டாடும் இந்தச் சந்தர்ப்பத்தில், பொருத்தமான தலைப்பு பொருத்தமான நபருக்குத் தரப்பட்டதில் மகிழ்ச்சி.

முதல் நாளன்று கவிஞரின் கவிதைகளை ஆராய்ந்தார் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம்.

# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்?

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் ஸூரிய பகவான், ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப்புண்ணியகாலங்களில்செய்கிறஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம் முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் ஸூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

<u>தேவலர்:</u> ஸங்கராந்தி சமயம் ஸூக்ஷ்மமானது, நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்க்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குபலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்ராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும் பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம்புண்ணியம் |
| மேஷம் | விஷு | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம்புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்னும், பின்பும், பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷு | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நர்ழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுஸ் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

ஸம்க்ஷேப கர்ம சாஸ்திரம்

அந்த சமயங்களில் கிராண்ட் ஸ்வீட்ஸ் ஸ்நாக்குகளை வாங்கி நல்லோர்களுக்கு கொடுக்கவும்.

<u>இனிப்பு வகைகள்:</u> மங்களூர் போளி, தேங்காய்ப் போளி, ரஸமலாய், ஸோன்பப்டி, கேக், மாலாடு, ரவா லாடு, பாம்பேகாஜா, இனிப்பு சோமாஸ், முந்திரி

காக எழுதிய நிலை இருந்ததில்லை'' என்றார் கா. மீ.

இரண்டாம் நாளன்று நாமக்கல் கவிஞரின் 'என் கதை'யும், 'மலைக் கள்ள'னும் கவிஞரின் குறிப்பிடத்தக்க உரைநடை நூல்கள் என்ற முறையிலே ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன.

''பெற்றோரின் எட்டாவது குழந்தையாக, முதல் ஆண் மகனாகப் பிறந்த கவிஞர், தம் வாழ்க்கையை, ஒவ்வொரு அத்தியாயமும் ஒரு சிறுகதை போல அமைத்து எழுதியிருக்கிறார் 'என் கதை'யில்; இவை துடிப்புடன் நெஞ்சை அள்ளும் வகையில் அமைந்தவை; ஆழமான நிகழ்ச்சிகளை மட்டுமே நயமாகவும் சுவையாகவும் எழுதியிருக்கிறார்'' என்று சொன்ன கா. மீ. அதிலிருந்து மாறி மாறிப் பல நகைச்சுவையானதும், நெகிழ்ச்சியானதுமான சம்பவங்களை எடுத்துக் காட்டியது மிகவும் ரசமாக அமைந்தது.

''ராமாயணம், திருக்குறள் இவற்றிலிருந்த ஈடுபாடே கவிஞரை 'மலைக் கள்ளன்' எழுதத் தூண்டியது. மர்மங்களும், துப்புத் துலக்கும் பாணிகளும் ஒரு புதினத்துக்கான எல்லா வடிவங்களும் கொண்டிருந்தாலும், திருக்குறளைக் குமார தேவனுக்கும், பூங்கோதையை ராமாயணத்துக்கும் உருவகப்படுத்தியே கவிஞர் இந்நூலை எழுதியிருக்கிறார்'' என்றார் கா. மீ. ''கவிதையைக் காட்டிலும், உரைநடையில் சிறந்து விளங்குகிறார் கவிஞர்'' என்பது சொற்பொழிவாளரின் துணிகர முடிவு!

மூன்றாம் நாள்: ''இலக்கியம், மொழி, அரசியல் — மூன்று தலைப்புகளிலும் ஆய்வுகள் செய்து எழுதியுள்ள கவிஞரின் நூல்களில், குறிப்பிடத்தக்க அம்சம் — அரசியலை வைத்துத்தான் இலக்கியத்தையே காண்கிறார் என்பது. கம்பராமாயணத்திலும் காந்தியத்தையே காணும் கவிஞர், ஒப்பியல் இலக்கியத்தை அன்றே செய்திருக்கிறார்; இலக்கியங்களை எப்படிச் சுவையோடு படித்து அனுபவிப்பது என்று எளிமையாகச் சொல்லித் தருகிறார். அவரது திருக்குறள் புது உரையில் சில ஏற்கத்தக்கவை, பல கருத்து மாறுபாடுகளுக்கு இடம் தருகின்றவை'' என்றெல்லாம் விரிவாகப் பல கருத்துக்களை வெளியிட்டார் சொற்பொழிவாளர்.

தலைவர் அறிமுக உரை, சிறப்பு விருந்தினர் பேச்சு என்று பாதி நேரம் போக, மீதி நேரமே சொற்பொழிவாளருக்குக் கிடைக்கிறது. இனிவரும் ஆண்டுகளில் சொற்பொழிவாளர் உரை மட்டுமே அனுமதிக்கப்பட்ட ஒரு மணி நேரத்துக்குள் அமைந்தால், சொற்பொழிவாளர் அவசர அவசரமாக உரை நிகழ்த்த வேண்டாமே என்று சொல்லத் தோன்றுகிறது.

— சித்தார்த்

# "தமிழகம் அறிந்துள்ள



# தலைசிறந்த முதல்வர்"

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — II
ராஜ்மோகன் காந்தி

4

சென்னை ராஜதானியின் பிரதம மந்திரி என்ற முறையிலும், நிர்வாகி என்ற விதத்திலும் ஸி. ஆரிடம் சில குறைகளும் இருந்தன. ஸி. ஆரிடம் யதார்த்த நோக்கு இல்லை என்பதை எர்ஸ்கைன் ஆரம்பத்திலேயே கவனித்தார். ஸி. ஆர். சிக்கன நடவடிக்கையின் ஓர் அம்சமாக அரசு ஊழியர்களுள் இந்தியர்கள் தங்கள் சம்பளத்தின் ஒரு பகுதியைத் துறக்கச் சம்மதிக்க வேண்டும் என்று கூறிய போது கவர்னர் புன்னகைத்துக் கொண்டார். வைஸ்ராய்க்கு எழுதிய கடிதத்தில் உண்மை இலட்சியவாதியான ஸி. ஆருக்குத் தம் கோரிக்கை நிராகரிக்கப்பட்டதில் பேரதிர்ச்சி என்று குறிப்பிட்டார். ஆனால் இந்த ஒரு சம்பவத்திலேயே ஸி. ஆர். பாடம் கற்றார். அதன் பிறகு எர்ஸ்கைனுக்கு ஸி. ஆர். மீது 'யதார்த்த நோக்கு இல்லாதவர்' என்று குற்றம் சாட்டும் வாய்ப்பே கிட்டவில்லை. ஸி. ஆர். தம்மை அன்றாடச் சில்லறை வேலைகளிலிருந்து விடுவித்துக் கொண்டு இன்னும் சற்று விவரமாக விஷயங்களை யோசிக்கவும், ஆராயவும் நேரம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற அக்காலத்திய விமர்சனம் நியாயமானதாகவே இருந்தது. அவருடைய தினவெடுத்த பேனாவைப் பற்றியும் சிலர் குறிப்பிட்டுள்ளனர். உதவியாளர்கள் எழுதி வைக்கிற குறிப்புக்கள், கடிதங்கள் முதலியவற்றைத் திருத்துவதில் பிரதம மந்திரி தேவைக்கு அதிகமான கவனம் செலுத்தினார். ஆனால் அவ்வேலை அவருடைய நேரத்தில் பெரும்பகுதியை எடுத்துக் கொண்டுவிட்டதாகக் கூற முடியாது. ஸி. ஆர். அனாவசியமாக மேடைப் பேச்சுக்களை அடிக்கடி ஒப்புக் கொண்டதாக சீனிவாச சாஸ்திரி கருதினார். "சிறிதோ, பெரிதோ, எந்த விஷயமானாலும் அது பற்றி அவர் தமது கருத்தை வெளிப்படுத்தியே ஆக வேண்டும் என்று எண்ணுகிறார்" என்று வருந்தினார் சாஸ்திரி.

சகமந்திரிகளின் பொறுப்புகளில் தலையிட்டார், ஸி. ஆர். சட்டசபையில் அவர்களிடம் கேட்கப்பட்ட கேள்விகளுக்குத் தாமே பதில் கூறிவிடுவார்! அவர்களின் வேலையில் ஒரு பகுதியைத் தாமே இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வார். சுப்பராயன்தான் கல்வி அமைச்சரே தவிர ஸி. ஆர். அல்ல. ஆனால் சட்டசபை நடவடிக்கைகளைப் பார்த்தால் அப்படித் தோன்றாது! மதுவிலக்கு, விவசாய இலாகாக்களையும் ஸி. ஆர். தம்மிடமே வைத்துக் கொண்டிருக்கிறாரோ என்றுதான் தவறாக எண்ணத் தோன்றும்! விற்பனை வரி பிரகாசத்தின் பொறுப்பில் இருந்திருக்க வேண்டும். ஆனால் அது சம்பந்தமான மசோதாவைச் சட்டசபையில் கொண்டுவந்து பேசியது ஸி. ஆர்.தான். விற்பனை வரிச் சட்

டத்தை அமுல்படுத்துவதிலும் அடிக்கடி தலையிட்டார். சுப்பராயனும் வேறு பலரும் ஸி. ஆரின் இந்தப் போக்கை எதிர்க்காவிட்டாலும் பிரகாசத்துக்கு இது கட்டோடு பிடிக்கவில்லை. மந்திரிசபை கூடிய பிரதம மந்திரியின் அலுவலக அன்றையச் சில மந்திரிகளே "ஸி. ஆரின் வகுப்பறை" என்றுதான் அழைத்தார்கள்!

பிரதமர் தம் சிந்தனையில் எப்போதும் பிறரை விட மூன்று அடிகள் முன்னால் சென்று கொண்டிருப்பதாகக் கிருஷ்ணமாச்சாரி உணர்ந்து சொன்னார். தம் விடைகள் தம் சகாக்களின் பதில்களைக் காட்டிலும் சிறந்தனவாக இருக்கும் என்று நன்கு அறிந்திருந்ததால் ஸி. ஆர். தயக்கமின்றி அவர்கள் இடத்தில் எழுந்து நின்று பேசினார். அவர் நடு நாயகமாய் விளங்கியதால் சட்டசபை நடப்புக்களில் சுவாரஸ்யம் அதிகரித்தது; தலைமைச் செயலகம் சுறுசுறுப்படைந்தது. ஆனால், இதனால் அவர் சகாக்களுக்குக் கற்றுக் கொள்வதற்கும், வளர்வதற்கும், பிரகாசிப்பதற்குமான வாய்ப்புகள் குறைந்து போயின. . .

இவை ஒருபுறமிருந்தாலும் ஸி. ஆருடைய சிறப்பியல்புகள் இந்தக் குறைபாடுகளை மீறிப் பிரகாசித்தன. உழைப்புத் திறன், நேர்மை, பிரகாசமான அறிவு, வாதத் திறன், இவை பற்றி அறிவோம். மக்களின் வரிப் பணத்தைச் செலவழிப்பதில் அவர் காட்டிய சிக்கனம் அதிமுக்கியமாகக் கவனிக்கத் தக்கது. இதனைப் பாராட்டிய ஐ. சி. எஸ். அதிகாரி கார்ல்ஸ்டன் கூறுவார்: இந்தியாவுக்குப் பிறகு சமீப காலத்தில் சுதந்திரம் அடைந்துள்ள பல நாடுகள் ஸி. ஆரை இந்த விஷயத்தில் பின்பற்றாமல் போனது வருந்தத் தக்கது. ஸி. ஆரின் மனோ இடத்தையும் பதவியை வகிக்கும் திறனையும் குறிப்பிட்டு டே சொல்கிறார்: "பிரதம மந்திரிதான் நிர்வாகத்தின் சக்தி வாய்ந்த தலைவர். அதை ஸி. ஆர். மறந்ததே கிடையாது! அதில் யாருக்கும் சந்தேகம் உண்டாகுமாறு அவர் நடந்து கொண்டதும் இல்லை!"

பிரிட்டிஷ் அரசுக்கு எதிராக காங்கிரஸின் சுயாட்சியை நிர்ணயிக்க முயன்ற ஸி. ஆர். புதுதில்லிக்கு எதிராக மாகாணங்களின் சுயாட்சி உரிமையையும் நிலைநாட்டினார். மாகாண மற்றும் தேசிய காங்கிரஸ் கமிட்டிகள் தன் மந்திரிசபையின் சுதந்திரத்தில் தலையிட அவர் அனுமதித்ததே இல்லை. எவ்வளவு சக்திமிக்க கட்சிக் கோஷ்டியானாலும் சரி, நிர்வாகத்தில் தலையிடவே முடியாது! ஒரு பெண்மணியின் தலைமையில் வலிமை வாய்ந்த காங்கிரஸ் ஊழியர்கள் குழு ஒன்று ஸி. ஆரை அணுகியது. ஒரு சினிமாக் கொட்டகை உரிமையாளருடன் பக்கத்து வீட்டின் சொந்தக்காரர் ஒருவருக்குத் தகராறு. அந்த வீட்டின் சொந்தக்காரர் சார்பாக முறையிடவே அந்தக் குழுவினர் ஸி. ஆரிடம் வந்தனர். தனி நபர்கள் சண்டைக்கு அரசியல் முலாம் பூச முயன்றனர். ஒரு சில வார்த்தைகளில் இவ்விஷயத்துக்கு முடிவு கூறி



* காமராஜர் பாராட்டு: "தமிழகம் அறிந்துள்ள தலைசிறந்த முதல்வர் ராஜாஜியே!"

விட்டார் ஸி. ஆர்: "திரு கலீல் ஷிராஸியின் பக்கம் சட்டம் இருந்தால் நான் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை; சட்டம் அவருக்கு எதிராக இருந்தால் அவர் செய்யக் கூடியது ஒன்றுமே இல்லை!"

விற்பனை வரியை அமுல் படுத்துவதற்காக அமர்த்தப்பட்ட மாரிஸ், புதிய வரி சம்பந்தமாகப் ப்ரீமியருடன் பேசுகையில் சில குணாதிசயங்களைக் கவனித்தார்: "பூரண மரியாதையுடன், பொறுமையாக, தோழமையோடு தன்னைக் காண வந்திருப்பவரிடம் பழகுவார். சிக்கலான விஷயங்களை விளக்கிச் சொல்லக் கேட்கும்போது இரண்டாம் முறை கேட்டுத் தெரிந்து கொள்ளாமல் ஒரே முறையில் கவனமாகக் கேட்டுப் புரிந்து கொள்வார். உடனடியாக தெளிவான, குழப்பமற்ற தமது முடிவையும் தெரிவித்து விடுவார்."

ஏ. ஜே. ப்ளாட் என்ற மற்றொரு அதிகாரி, புனித ஜார்ஜ் கோட்டையில் ப்ரீமியரின் அலுவலகம் துப்புரவாக அது அது அதன் அதன் இடத்தில் வைக்கப்பட்டு இருந்ததையும், காலம் தாழ்த்தாது நேரடியாக விஷயத்துக்கு வரும் ஸி. ஆரின் சுபாவத்தையும் குறிப்பிடுகிறார். திரு ஸாண்டர்ஸ், "அவர் தம் அதிகாரிகளை விட்டுக் கொடுப்பதேயில்லை" என்கிறார்.

ஸி. ஆர். உறுதியாக இருந்தாரேயொழிய பிடிவாதக்காரராக இருந்ததில்லை. புதிய விஷயங்களைக் கற்றுக் கொள்ளத் தயாராகவும் இருந்தார். ஊரார்வில் விசாரணைக் கமிஷன் அறிக்கையைத் தொடர்ந்து கால தாமதமின்றி அரசே ஓர் அறிக்கையை வெளியிட்டது. பிற்காலத்தில் இத்தகைய அறிக்கைகள் அரிதாகிப் போய்விட்டன. அரசு இந்த அறிக்கையில் கலவர கட்டுப்பாடு விஷயத்தில் தன்னிடம் இருந்த குறைபாடுகளை ஒப்புக் கொண்டது. சிராளாவில் கண்ணீர்ப் புகையை உபயோகிக்காமல் போனதற்கு வருத்தம் தெரிவித்தது. உரிய காலத்தில் யூனியன் தலைவரை அழைத்து வந்திருந்தால் போராட்டத்தின் வீரியம் குறைந்திருக்கக்

கூடும் என்று ஒப்புக் கொண்டது. தன் அதிகாரிகளுக்குப் புதிய செயல் முறைகளை வகுத்துத் தந்தது.

ஸி. ஆரின் ஜனநாயகப் பண்பு, வேறு ஒருவிதத்திலும் பிரகாசித்தது. அவருடைய மந்திரிசபையின் சின்னச் சின்ன நடவடிக்கைகள் கூடக்கூர்ந்து கவனிக்கப்பட்டு மேடையிலும், செய்தித் தாள்களிலும், சட்டசபையிலும் விமர்சிக்கப்பட்டன; தாக்குதலுக்கும் உள்ளாயின. இந்த விமர்சனங்களை ஸி. ஆர். வரவேற்றார்; அதே சமயத்தில் சட்டசபையில் அரசை ஆதரித்துப் பேசிய காங்கிரஸ்காரர்கள் சுருக்கமாகப் பேசுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டனர்!

எதிர்க்கட்சித் தலைவர் முத்தையா செட்டியார் கூறினார்: "அடிக்கடி அவையில் அவருக்கும் எனக்கும் இடையே வாக்கு வாதம் நிகழ்ந்தது. வாள் வீச்சுப் போன்ற அவருடைய பதில்கள் எப்போதும் ஏற்புடையனவாய் இல்லாவிட்டாலும் பிரமிப்பூட்டவே செய்தன. சட்டசபையில் பெரும்பான்மை பலம் பெற்றிருந்த போதும், உண்மையான ஜனநாயகவாதியாக இருந்த அவர் எதிர்க்கட்சியினரின் விமர்சனங்களை வரவேற்றார்; பொறுமையுடன் கேட்டுக் கொண்டார்."

இன வேறுபாடு விஷயத்திலும் அவர் பரந்த மனப்பான்மையே கொண்டிருந்தார். "ஓர் ஐரோப்பியரை ஏன் மாகாண மாஜிஸ்ட்ரேட்டாக நிர்ணயிக்க வேண்டும்?" என்று சட்டசபையில் கேட்கப்பட்டபோது, "ஏனென்றால் அவரே அப்பதவிக்கு மிகப் பொருத்தமானவர்" என்று பதில் சொன்னார் ஸி. ஆர். "அதிகாரியின் இனம் காரணமாக எழுப்பப்படும் ஆட்சேபணைகளை அரசு எந்தச் சந்தர்ப்பத்திலும் கண்டனம் செய்யும்" என்று கூறினார்.

ஸி. ஆரின் தோற்றமும் நடத்தையும் அவரைக் கடின சித்தம் உடையவர் என்று எண்ணச் செய்தாலும் உண்மையில் அவர் மனிதாபிமானம் கொண்டவராய் விளங்கினார். எல்லோரிடமும் நண்பராய்ப் பழகி நகைச்சுவை உணர்வுடன் சிரித்தார், சிரிக்க வைத்தார். அதிகாரிகள் இந்த குணங்களால் கவரப்பட்டு அவருக்குப். பணிந்தார்கள்.

1939 இல் அரசு தலைமைச் செயலகத்தில் ஸி. ஆரிடம் பணியாற்றிய டேவிட் ம்யூர் சொல்கிறார்: "அவருக்குப் பணியாற்றுவதைக் கௌரவமாகக் கருதாத ஐ. ஸி. எஸ். பிரிட்டிஷ் அதிகாரியே இல்லை."

1941 இல் ராஜாஜியின் மந்திரிசபையைப் பற்றி நேருஜி எழுதினார்: "மதராஸ் அரசு தன் குறுகிய பதவிக் காலத்தில் பிற மாகாண அரசுகளைக் காட்டிலும் அதிகமாகச் சாதித்தது."

கிருஷ்ணமாச்சாரி ஸி. ஆரின் நிர்வாகத்தை "ஓர் எடுத்துக்காட்டான மாகாண அரசு" என்று வர்ணித்தார்.

காமராஜரோ, எல்லாரையும் எல்லாவற்றையும் பார்த்து உணர்ந்தறிந்த பின், "இந்தத் தென்னக மாகாணத்தின் தலைசிறந்த, மிகப் பெரிய முதல் மந்திரி ஸி. ஆர். தான்" என்று பிற்காலத்தில் பாராட்டினார்.

(தொடரும்)

தமிழாக்கம்: சீதா ரவி

---

ஓர் அன்பர் தினசரி, தவறாமல் தொழுகைக்கு வந்து பெரும்பாலான நேரங்களைத் தொழுகையிலேயே செலவிட்டுக் கொண்டிருந்தார். நபிகள் நாயகம் அருகிலிருந்த ஒருவரிடம் அவரைப் பற்றி விசாரித்தார்.

"எப்போது பார்த்தாலும் இவர் இறைவனிடமே ஈடுபட்டிருக்கிறாரே, இவருக்குக் குடும்பம் கிடையாதா?"

"இருக்கிறது ஐயா. அதை இவருடைய சகோதரர் கவனித்துக் கொள்கிறார்."

"அப்படியானால் இவர் தமக்கு உள்ள கடமையைத் துறந்துவிட்டு அல்லவா தொழுகையில் ஈடுபடுகிறார். இது அல்லாஹ்வின் கட்டளையை மீறுவதாயிற்றே!" என்றாராம் நபிகள் நாயகம்.

சுப்ர. பாலன்.



படம்: சென்னையில் (மிலாடி நபி) நபிகள் நாயகம் பிறந்தநாள் விழா ஊர்வலம். (புகைப்படம்: சுபா.).

# ஜெய ஹே! ஜெய ஹே! ஜெய ஜெய ஹே!

## புதுக்கோட்டை நா. முத்துபாஸ்கரன்

எதிரிகளை வணங்கி
கிருஷ்ணனைக் குறி
பார்க்கும்
அர்ச்சுனர்கள்.

கோவலனை எதிர்த்து
பாண்டியனிடம் நீதி
கேட்கும்
கண்ணகியர்.

துச்சாதனன் பதற
பாஞ்சாலியை உரிக்கும்
பாண்டவர்கள்.

விஸ்கி பாட்டிலுக்காய்
தேச ரகசியத்தை விற்கும்
அதிகாரிகள்.

தவக்களைக் கூட்டம்
சேர்க்க,
'செத்தவர்கள்' ஓட்டுப்
போடவரும்
தேர்தல்கள்.

இமய முடிவரை
வளர்ந்தும்
கடலின் ஆழம் வரை
வீழ்ந்து கிடக்கும்
பொருளாதாரம்.

தந்தைக்குச் சாராயம்
கொடுத்து
பிள்ளைக்குச் சத்துணவு
போடும்
திட்டங்கள்.











புதிய மந்திரி ஆணையிட
முன் அனுபவம் கேட்கும்
வேலை வாய்ப்புகள்.

ஆற்றுத் தண்ணீரில்
ஆரம்பித்து
ரத்தக் கண்ணீரில் ஓட்டுப்
போடும்
பஞ்சாபியர்.

இலங்கையில் தப்பிவந்து
இராமேஸ்வரத்தில்
கற்பிழக்கும்
தமிழச்சி.

கிளுக்குப் படமும்
சிருங்கேரி மடமுமாய்
'இலக்கியம்' வளர்க்கும்
பத்திரிகைகள்.

திரைப்பட வாசலில்
கொதித்து
கறுப்புச் சட்டங்களில்
உறைந்து போகும்
வேர்வைகள்.

சொர்க்கத்தின் சமாதி
யிலும்
புல்லாய் முளைத்து
எழும்
நாங்கள்.

எல்லாம் நடந்து வர,
பார்த்து, சிரித்து
பழசாகும்
நீங்கள்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani    Editor: K. Rajendran

காட்பரிஸ்

# போர்ன்விடா

MILK

Cadbury's Bournvita

Cadbury's Bournvita

NOW SAVE Rs.2/-

SUGAR

MALT

COCOA

## சுறுசுறுப்பு பானம்!

போர்ன்விடா—கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் ஊட்ட நலன்களைக் கொண்ட ஒரு உன்னத உணவு பானம் ஆகும். 100 ஆண்டுகளுக்கும் மேலாக அனுபவம் உடைய காட்பரி நிபுணர்களால் தயாரிக்கப்படுவது போர்ன்விடா.

ஒவ்வொரு கப் பாலுடனும் இரண்டு ஸ்பூன் போர்ன்விடா சேர்த்து, உங்கள் குடும்பத்தினருக்கு நலமான சுவையான பானம் அளியுங்கள். வளரும் குழந்தைகளுக்கு விசேஷமாக நன்மை அளிப்பது போர்ன்விடா. அவர்களுக்கு தேவைப்படும் விசேஷ ஊட்டச் சத்தும் சூடிகையும் பெற்றிட தினமும் இருவேளை அவர்களுக்கு போர்ன்விடா தாருங்கள்.

கவனத்துடன் வளர்த்திடும் ஒரு அன்னை கூறுகிறாள் "என் குழந்தைகளுக்கு போர்ன்விடா தருவதினால், வளரும் வயதில் அவர்களுக்குத் தேவையான விசேஷ ஊட்டம் கிடைக்கிறது. ஆகவே நல்ல வளர்ச்சி போர்ன்விடா பயிற்சி."



போர்ன்விடாவின் இனிமைக்காலம், போர்ன்விடா அளித்தவரை பாசமனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்.

OBM/5135/TAM

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Srilanka

# இதோ, எனது பாட்டி!

கோத்ரெஜ் வீட்டுக்கு வந்தபோது எடுத்தது இந்த படம்

பல ஆண்டுகளுக்கு முன்பு.

ஆனால், பாட்டி, கோத்ரெஜுடன் தான் வளர்ந்ததை ஆசையுடன் நினைவு கூறுகிறார்.

பாட்டியின் மகள் மணப்பெண் ஆனபோதும் கோத்ரெஜ் தான் வீட்டிற்குக் கொண்டு போனாள். அதற்குக் காரணமுண்டு. கோத்ரெஜ் தானே முன்னோடியான ரெ:ப்ரிஜெரேட்டர்! தலைமுறை தலைமுறையாக குடும்பத்தின் முதல் விருப்பமும் அதுவே.



பாரம்பரியமாகவே மிகச் சிறந்தது கோத்ரெஜ் என்பது எல்லார்க்கும் தெரியும். நீடித்திருக்கும் மதிப்பிலே உயர்ந்த வீட்டுபயோகப் பொருள்களுக்கு. நீடித்திருக்கும் அதன் உறவு.

பாட்டி இன்றும் அப்படியே-திறமையும், உறுதியும் கொண்டவராக இருக்கிறார் கோத்ரெஜ் கூடத்தான்.

## நம்பகமுள்ள Godrej® ரெ:ப்ரிஜிரேட்டர்

உயர்தொழில் நுட்பத்தில் உயரிய உற்பத்திகள்,
உயரிய மதிப்பு, எக்காலும்.